மலர் – 2 இதழ் – 1



# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

இலக்கியம், சமயம், பண்பாட்டு ஆய்விதழ்

ஜூலை, 2023

தனிச்சுற்றுக்கு மட்டும்

ஆசிரியர்: முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி







தமிழர் இலக்கிய சமய பண்பாட்டு ஆய்விதழ்

# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

*மலர்-2* *ஜூலை – 2023* *இதழ்-01*

**சிறப்பாசிரியர்**
*பொறிஞர் கவிஞர் முத்தமிழ் விரும்பி*

**நிறுவனர் & தலைமைப் பதிப்பாசிரியர்**
*முனைவர். திருமதி செ. இராஜேஸ்வரி*

**பொறுப்பாசிரியர்**
*முனைவர். சந்திரிகா சுப்பிரமணியன்*

**ஆசிரியர் குழு**
*கிங்ஸ்டன் ஜெகநாதன் (இந்தியா)*
*தேமொழி (அமெரிக்கா)*
*அன்பு ஜெயா (ஆஸ்திரேலியா)*
*மின்னச்சன் இங்கர்சால் (நோர்வே)*
*Dr. புதேரி தானப்பன் (டில்லி)*

**வடிவமைப்பு**
*C. சந்திர விமல் M.A., B.Ed*

*தனி இதழ் ............................................ ரூ 120*
*அரையாண்டு சந்தா ............................. ரூ 600*
*ஆண்டு சந்தா......................................... ரூ 1200*

Google Pay / Phone Pay மூலம் செலுத்த
*+91 7010997639*

**Thamizhanangu**

Printed & Published by
E. Satish Rajkumar (Advocate)
3/422, Thiruvalluvar Street,
Dinamani Nagar, Madurai,
Tamil Nadu 625 018.
Ph: +91 7871123226, +91 7010997639

*கட்டுரைகள் அனுப்புவோர்*

rajetamiljuly1@gmail.com
thamizhanangu1@gmail.com க்கு அனுப்பவும்


---



## உள்ளடக்கம்

# வைக்கம் ஏற்படுத்திய விளைவுகள்



**முனைவர் சிவ. இளங்கோ,**

*6, கவிஞர் புதுவைச் சிவம் வீதி,*
*வெங்கட்ட நகர், புதுச்சேரி – 605 011.*
*பேசி: 99940 78907.*
*Mail ID: ilangosiva57@gmail.com*

*வைக்கம் போராட்டம் நடந்து நூறாண்டு ஆகிவிட்டது. மன்னர் ஆட்சியின் இறுதிக் கட்டப் போராட்டமாக இதனைக் கூறலாம். கேரளாவில் இப்போராட்டம் ஏற்படுத்திய விளைவுகள் இன்றைய அரசியலில் தாக்கத்தையும், பின் விளைவுகளையும் இன்று வரை ஏற்படுத்திக் கொண்டே இருக்கின்றன. முதலில் வைக்கம் போராட்டம் குறித்து ஒரு சிறு கண்ணோட்டம்:*

*வைக்கம் கேரளாவில் உள்ள ஒரு நகரம். கேரளவாசிகளுக்கு வைக்கத்தப்பன் குடி கொண்டுள்ள ஊர். தற்போது கோட்டயம் மாவட்டத்தில் வட்டத் தலைநகராக இருக்கும் இந்த ஊர், "வைக்கம் போராட்டம்" மூலம் அறியப்படும் முக்கிய நகரமாகும். ஒரு நூற்றாண்டுக்கு முன்பு வைக்கம், திருவாங்கூர் சமஸ்தானத்தின் கட்டுப்பாட்டில் இருந்தது. இந்தியாவின் கேரளா மாநிலத்தின் தென் பகுதிகளையும், தமிழ்நாட்டின் கன்னியாகுமரி மாவட்டத்தையும் உள்ளடக்கி இருந்த மன்னராட்சிப் பகுதியே திருவாங்கூர் சமஸ்தானமாகும். 1729 ஆம் ஆண்டு தொடங்கி, முப்பதாண்டுக் காலம் திருவிதாங்கூர் சமஸ்தானத்தை மார்த்தாண்ட வர்ம மகாராஜா ஆண்டு வந்தார். இவர் பார்ப்பனர்களின் ஆலோசனைகளைக் கேட்டு ஆட்சி புரிந்தார். பார்ப்பனர்கள் சொல் கேட்டு நாட்டை, பத்மநாப சுவாமிக்குக் காணிக்கை ஆக்கியதன் மூலம் உண்மையில் பார்ப்பனர்களுக்கே காணிக்கையாக்கினார். இதனால் அங்குச் சனாதனம் கோலோச்சியது.*

*உயர் சாதியினர் வாழும் இடங்களில் நாடார், ஈழவர், புலையர், தீயர் போன்ற வகுப்பினரைத் தாழ்த்தப்பட்ட சாதியினர் என்று கூறிப் பார்வையில் இருந்தும் விலக்கி வைத்தனர். பொதுக்குளங்கள், கிணறுகள், சந்தைகள், சாலைகள் ஆகியவற்றைப் பயன்படுத்தவும் தடை விதிக்கப்பட்டிருந்தது. இவர்கள் தங்களையே தாழ்த்திக் கொள்ளும் வகையில் ஆடை, அணிகலன் அணிய வேண்டும். பண்டம், பாத்திரம், வாழ்விடம் அமைத்துக் கொள்வதிலும்*

கட்டுப்பாடுகள் நிறைய உண்டு. இவர்கள் இறை வழிபாடு செய்வதிலும் பல கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. கோயில் நுழைவு மட்டுமல்ல, கோவிலைச் சுற்றியுள்ள தெருக்களில் கூட இவர்கள் நடமாடத் தடை இருந்தது. இவர்களைப் போலவே ஆயித்தக்காரர், ஆசாரிகள், வாணியர்கள், நெசவாளிகள் ஆகியோரும் பொதுவிடங்களில் நடத்தப் பட்டனர். இவற்றிற்கே உரிமையில்லை. கல்விக்கு மட்டும் உரிமை கிடைத்து விடுமா என்ன, அதற்கும் தடை தான்.



மேல்சாதி தவிர்த்த மகளிர் அனைவர்க்கும் மேலாடை அணியத் தடை. இது தோள்சீலைப் போராட்டத்திற்கு வழி வகுத்தது. இன்னொரு பக்கம் தாழ்த்தப்பட்டோருக்கு ஆபரணங்களை அணியவும், குடை பிடிக்கவும், காலணி அணியவும், அனுமதி மறுக்கப்பட்டே வந்தது. ஓடு வேய்ந்த வீடுகளில் வசிப்பதும், பால் கொடுக்கும் பசுக்கள் வளர்ப்பதும், வாகனங்கள் உபயோகிப்பதும் தடை செய்யப்பட்டிருந்தது. திருமணப் பந்தல்களில் அலங்காரம் செய்வதும் மறுக்கப்பட்டது. பெண்கள் தண்ணீர்க் குடத்தை இடையில் சுமந்து செல்ல அனுமதிக்கப்படவில்லை. குடத்தைத் தலையில் வைத்து இருகைகளாலும் அதைத் தாங்கிப் பிடித்துச் செல்லவே அனுமதிக்கப்பட்டனர். மொத்தத்தில், "சாதிப் பைத்தியங்கள் வாழும் பைத்தியக்கார விடுதியே கேரளா" என்று விவேகானந்தர் சொன்னதை நூறு விழுக்காடு சரி என்று நிரூபித்தது கேரளப் பண்பாடு.

இதுபோன்ற பல நடவடிக்கைகளால் பாதிக்கப்பட்டு ஏற்கனவே மனம் குமுறிக் கொண்டிருந்த மக்கள் இவற்றையெல்லாம் எதிர்த்து சத்தியாகிரகப் போராட்டம் நடத்த முடிவெடுத்தனர். இவர்கள் மகாத்மா காந்தியின்

*தலைமையிலான காங்கிரஸ் கட்சியை ஒருங்கிணைத்தனர். காக்கிநாடா காங்கிரஸ் மாநாட்டில் (1923), மலபார், கொச்சின், திருவாங்கூர் சமஸ்தானக் கோவில்களில் ஒடுக்கப்பட்ட மக்கள் நுழைய அனுமதி மறுக்கப்படுவதை, டி.கே. மாதவன் ஓர் அறிக்கையாகச் சமர்ப்பித்தார். இதன் அடிப்படையில், தீண்டாமைக்கு எதிரான நடவடிக்கைகளை மேற்கொள்ள கே. கேளப்பன் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. இக்குழு, கோயில்தெரு நுழைவு மற்றும் கோயில் நுழைவுக்காகக் 'கேரளப்பிரயத்தனம்' என்னும் நடவடிக்கையை 1924 ஆம் ஆண்டில் மேற்கொண்டது.*

*திருவிதாங்கூர் சமஸ்தானப் பிரச்சனைகளையும் காந்தி அவருடைய உதவியாளர்கள் வழி அறிந்து வந்தார். கேரளக் காங்கிரஸ்காரர்களும் கடிதம், தந்தி வழி அவ்வப்போது நிலைமையைத் தெரிவித்து வந்தனர். வைக்கம் சத்தியாக்கிரகம் குறித்து எடுக்கப்பட்ட முடிவைக் காந்தியின் பார்வைக்கு, 13.3.1924 அன்று, கேரள காங்கிரஸ் கமிட்டியின் செயலாளர் கே. பி. கேசவமேனன் கடிதம் எழுதித் தெரிவித்து விட்டுப் பிற காங்கிரஸ்காரர்களுடன் 'முறைஜெப'த்தன்று போராட்டத்தில் இறங்கினார். ('முறைஜெபம்' என்பது ஆறு ஆண்டுகளுக்கு ஒருமுறை, ஏராளமான பொருட்செலவில், பார்ப்பனர்களை மகிழ்விக்க, மன்னர் கொண்டாடும் உற்சவக் காலம் - தவத்திரு தர்மதீர்த்த அடிகளார், இந்துமதக் கொடுங்கோன்மை வரலாறு நூல், விடுதலை, 1.4.2023).*

*இந்தப் போராட்டம் நடந்து கொண்டிருந்தபோது வழக்குரைஞர் மாதவன், டி. கே. மாதவன், பாரிஸ்டர் கேசவமேனன், ஜார்ஜ் ஜோசப், செபாஸ்டியன், கே.ஜி. ராய் உட்படப் பலர் திருவாங்கூர் மன்னர் ஆணைப்படி கைது செய்யப்பட்டனர். போராட்டக்காரர்கள் பலரும் கைது செய்யப்பட்டு விட்ட நிலையில், சத்தியாகிரகத்தைத் தலைமை ஏற்று நடத்த யாரும் இல்லை. எனவே சிறையில் இருந்தபடியே ஜார்ஜ் ஜோசப், மற்றும் குரூர் நீலகண்ட நம்பூதிரி ஆகிய இருவரும் சேர்ந்து பெரியார் ஈ.வெ.ரா.வுக்கு ஒரு கடிதம் எழுதினர். அப்போது தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவராகப் பெரியார் இருந்தார். கேரள காங்கிரஸ் கமிட்டியின் தீவிர அழைப்பை ஏற்று, தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைமைப் பொறுப்பை ராஜாஜிக்கு ஒரு கடிதம் மூலம் மாற்றிக் கொடுத்துவிட்டு, 13.4.1924 அன்று,*



ஈ.வெ.ரா. அவர்கள், கோவை அய்யாமுத்து உள்ளிட்ட சில தோழர்களுடன் வைக்கம் புறப்பட்டார்.

முதல் கட்டமாக, ஏப்ரல் 16 ஆம் தேதி பெரியார் வைக்கம் சத்தியாகிரகப் பொதுக்கூட்டத்தில் பேசினார். இதன் பேரில் ஈ.வெ.ரா. மீது விசாரணை நடத்தப்பட்டு, மே மாதம் 22ஆம் தேதி, அவருக்கு ஒரு மாத கால வெறுங்காவல் தண்டனையும், ஊர் விலக்கமும் வழங்கப்பட்டு, 'அருவிகுத்தி' சிறையில் அடைக்கப்பட்டார். இதனைத் தொடர்ந்து பெரியாரின் மனைவி நாகம்மையார் சத்யாக்கிரகப் போராட்டத்தைத் தொடர்ந்தார். ஒரு மாதம் முடிந்து ஜூன் 22ஆம் தேதி விடுதலையான பெரியார், மீண்டும் வைக்கம் சென்று போராட்டங்களில் கலந்து கொண்டார். இதனால் மேஜிஸ்ட்ரேட்டின் ஊர் விலக்க உத்தரவை மீறி நடந்ததற்காக விசாரிக்கப்பட்டு நான்கு மாதம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார். முதல் சிறைவாசம் முடிந்து விடுதலையான 27 வது நாளில் 18.7.1924 அன்று மீண்டும் கைது செய்யப்பட்டுக் கோட்டயம் மற்றும் திருவனந்தபுரம் மத்தியச் சிறையில் அடைக்கப்பட்டார் பெரியார்.

வைக்கம் போராட்டத்தை அடக்க நம்பூதிரிகளும், பார்ப்பனர்களும் ஒன்று கூடிச் "சத்ரு சம்ஹார யாகம்" (எதிரியை வதம் செய்யும் யாகம்) நடத்தினர். ஆனால் மன்னர் இறந்து போனார். திருவிதாங்கூர் மன்னரின் இறப்பை அடுத்து அவருடைய வாரிசு அரசர் ஆனார். அதனை முன்னிட்டு வைக்கம் போராட்டச் சத்தியாக்கிரகிகள் 19 பேரும், 30.8.1924 அன்று விடுதலை செய்யப்பட்டனர். எதிரிகளுக்காக யாகம் செய்யத் தொடங்கி மன்னரே இறந்துவிட்ட நிலையில், வைக்கம் போராட்டத்திற்கான எதிர்ப்புகளும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து வந்தன. இதனால் போராட்டக்காரர்களோடு உடன்படிக்கை ஏற்படுத்திக் கொள்ள ராணி விருப்பம் தெரிவித்தார். இதன்படி வைக்கம் புறப்பட்டு வந்த மகாத்மா காந்தியை, 8. 3. 1925 அன்று ஈரோட்டில் வரவேற்ற ஈ.வெ.ரா., பின்னர் வைக்கம் சென்றார். 1925 ஆம் ஆண்டு, மார்ச் மாதம், திருவாங்கூர் சமஸ்தானத்தின் இராணி சேதுலட்சுமி பாய் உடன் காந்தியடிகள் நடத்திய பேச்சு வார்த்தையில், சமஸ்தானத்தில் உள்ள கோயில்களின் சுற்றுப் பாதைகளில் அனைத்துச் சாதியினரும் நடமாட அனுமதிப்பது என்று முடிவு எடுக்கப்பட்டது. மேலும் வைக்கம் பகுதிகளில் பெரியார் ஈ.வெ.ரா. நுழைவதற்கான தடையும் விலக்கிக் கொள்ளப்பட்டது.

"ஈ.வெ.ராமசாமி நாயக்கருக்கு விரோதமாகப் பிறப்பித்த தடை உத்தரவைத் திருவாங்கூர் கவர்மெண்டார் வாபஸ் வாங்கிக் கொண்டு விட்டார்கள் என்பதைக் கேட்க வாசகர்கள் சந்தோஷம் அடைவார்கள்"

என்று காந்தியடிகள் தனது 'யங் இந்தியா', 23. 4. 1925 இதழில், தன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்டார். அதுவரை இருந்த அனைத்துத் தடைகளையும்

*திருவாங்கூர் சமஸ்தானம், 27.11.1925 முதல் விலக்கிக் கொண்ட பின்னர், வைக்கம் வெற்றி விழா, 29. 11. 1925 இல் நடைபெற்றது. அதில் தனது மனைவி நாகம்மையாருடன் கலந்து கொண்ட பெரியார் ஈ.வெ.ரா., "நமது நோக்கம் அனைத்துச் சாதியினரும் சாலைகளில் நடக்க உரிமை பெறுவது மட்டுமல்ல; அனைவரும் கோயில்களில் நுழைய உரிமை பெற வேண்டுவதாகும்" என்று குறிப்பிட்டார். அத்துடன் காங்கிரஸ் நடத்தி வந்த வைக்கம் சத்தியாக்கிரகம் விலக்கிக் கொள்ளப்பட்டது.*

*ஆச்சாரம் வலியுறுத்தும் உயர் சாதி ஆதிக்கத்திற்கு முடிவு கட்டும் முயற்சியின் ஒரு தொடக்கத்தை வைக்கம் போராட்டம் உறுதி செய்ததாக வரலாற்று ஆய்வாளர்கள் கருத்துரைத்தனர். அதே நேரம், இந்த வைக்கம் போராட்டம் பெரிதாக எதையும் சாதித்து விடவில்லை என்றும், கோவிலைச் சுற்றி இருக்கும் தெருக்களில் கிழக்குப் பகுதி வாயில் உள்ள தெருவைத் தவிர்த்துப் பிற மூன்று சாலைகளிலும் நடப்பதற்கு மட்டுமே உரிமை என்பது ஒரு சமுதாயப் புரட்சியின் ஆத்மாவை எள்ளி நகையாடுவது போல் இருப்பதாகவும் அவர்கள் கருதினார்கள். எப்படியாயினும் வைக்கம் போராட்டத்தைத் தொடர்ந்து 'கோயில் நுழைவு உரிமை' என்பது இந்தியாவில் நாடு தழுவிய இயக்கமாக இன்று வரை வளர்ந்து கொண்டு வருகிறது. அனைத்துச் சாதியினரும் கோயிலில் நுழைவதை 'உரிமை' என்ற அளவில் பெரியார் வரவேற்றிருந்தாலும், அதனால் ஏழைகளுக்கு எந்த முன்னேற்றமும் ஏற்படாது என்று அவர் கருதியதால் கோவில் நுழைவு என்ற கருத்தையே அவர் விரும்பவில்லை. ஒடுக்கப்பட்டவர்களுக்குப் பொருளாதார விடுதலை எந்த அளவுக்கு முக்கியமோ, அந்த அளவுக்குக் கோயில் நுழைவு உரிமை முக்கியம் இல்லை என்று அவர் கருதினார். கோயில் சுற்றுத் தெருக்கள் நுழைவுப் போராட்டம் வெற்றி அடைந்ததற்குக் கூட, "அது சமத்துவ நோக்கிலான அறிவிப்பு இல்லை; இந்து மதம் பிளவு பட்டுவிடக்கூடாது; மக்கள் வேறு மதத்திற்குச் சென்று விடக்கூடாது" என்று தான் அந்த வழிநடையைத் திறந்தார்கள் என்ற கருத்து அப்போதே முன்வைக்கப்பட்டது. அதைத் தொடர்ந்து எழுந்த கோயில் நுழைவுப் போராட்டக் காலங்களின் போதும், "கோயிலில் நுழைய அனுமதிக்கப்படவில்லை என்றால், மதம் மாற்றமே இறுதித் தீர்வு" என்ற கருத்தும் முன்வைத்துப்*



*பேசப்பட்டது. 1934 ஆம் ஆண்டில், அப்படி ஒரு கூட்டத்தில் பேசிய பெரியார், கோயில் நுழைவை விட மதம் மாறுவதை வரவேற்றார். எந்த மதம் மாறுவது என்பதுதான் முக்கியம் என்று கூறிய பெரியார், "எந்த மதம் வேண்டுமானாலும் மாறலாம்; ஆனால் ஆரிய சமாஜத்திற்கு மட்டும் போய்விடாதீர்கள்" என்று அறிவுறுத்தினார்.*

*வைக்கம் போராட்டம் ஏற்படுத்திய வெற்றியைத் தொடர்ந்து, அனைத்துச் சாதியினரும் கோவிலில் நுழையும் உரிமையும், 1937 ஆம் ஆண்டில், திருவாங்கூர் சமஸ்தானத்தின் இராணி சேதுலட்சுமி பாய் அவர்களால் பிரகடனப்படுத்தப்பட்டது. "கோவில் நுழைவுப் பிரகடனம்" (Temple Entry Proclamation, 12. 11. 1936) விழாவிற்கு மகாத்மா காந்தியும் வந்திருந்தார். இந்தக் கோயில் நுழைவுப் பிரகடனம் நிகழ்வுக்குக் காந்தியடிகள் வருகை தந்தும், பெரியாருக்குக் கடிதம் அனுப்பியும் கூட, அவர் அந்நிகழ்விற்குச் செல்லவில்லை.வைக்கம் சத்தியாகிரகம் தொடர்பாகவும், காங்கிரஸ் கட்சியின் வளர்ச்சிக்காகவும் 1920 ஆம் ஆண்டு தொடங்கி 1937 ஆம் ஆண்டு வரையிலான 17 ஆண்டுகளில் காந்தியடிகள் ஐந்து முறை கேரளாவிற்கு வருகை தந்தார். மொத்தமாக 50 நாட்கள் அவர் கேரளாவில் தங்கியிருந்து அம் மக்களோடு பழகியும், அவருக்கு ஒன்று மட்டும் புரியாமலேயே போய் விட்டது. கல்வியில் வளர்ந்ததும், அன்பான ஆட்சியாளர்களால் ஆளப்பட்டதும், இயற்கை அழகு செறிந்ததுமான கேரளாவில் எப்படித் தீண்டாமையும், அணுகாமையும் ஆழப் புதைந்திருந்தன என்பதுதான் அது. இந்து மத மேலாதிக்கமும், வர்ணாசிரமப் பிரிவுகளும் அவர் அறியாத ஒன்றல்ல. ஆனாலும் வருணாசிரமத்தின் மேல் அடுக்குப் பார்வைதான் அவருடைய 'பனியா' என்னும் பிறவிவழி அவருக்குப் போர்த்தப்பட்டிருந்த தோல் போர்வை. இந்தியாவில் பிறந்து வளர்ந்திருந்தும் தீண்டாமை என்னும் கொடிய பாம்பு அவரைத் தீண்டியதும் இல்லை, அவர் பார்த்ததும் இல்லை என்பது போலவே அவரது வர்ணாசிரமப் பார்வைகள் அமைந்திருந்தன. வழக்குரைஞராகத் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றிருந்த அவருக்கு நிறவெறி மேலாதிக்கமும், அதையொட்டிய நிகழ்வுகளும் மனித மனங்களின் அவலங்களைக் கற்றுக் கொடுத்திருந்தன. ஆனால் பிறப்பை அடிப்படையாக வைத்துத் தீண்டக் கூடாத, ஏன், காணக் கூடப் படாத ஒரு சாதிவெறி மேலாண்மை தன் சொந்த நாட்டிலேயே இருப்பதைக் கேட்டு அவர் வியந்தாரோ இல்லையோ, தீண்டாமையை எதிர்த்த அளவிற்குச் சனாதனத்தை எதிர்க்காத அவரது போக்கைக் கண்டுச் சமூக சீர்திருத்தவாதிகள் வியந்தனர்.*

*வைக்கம் சத்யாக்கிரகப் போராட்டத்தின் இறுதிக் கட்டத்தில், திருவாங்கூர் சமஸ்தான இராணியாருடன் பேச்சுவார்த்தை நடத்த 1925 ஆம் ஆண்டில் காந்தி திருவாங்கூர் வந்திருந்த போது, அவரும் ராஜாஜியும் அரசாங்க விருந்தினர்கள் மாளிகையில் தங்கினார்கள். அப்போது இரவு வெளியில் இருந்து ஓர் அவலக்*

குரல் காந்தியைத் திகிலடையச் செய்தது. அதேநேரம், அக்குரலைக் கேட்டும் கலங்காத ராஜாஜி, "அது காணக்கூடாத சாதியினரின் குரல்" என்றும், "அவர்கள் 'நாயாடி' என்று அழைக்கப்படுபவர்கள்" என்றும் கூறினார். அவர் மேலும் கூறினார்: "அவர்கள் காணக்கூடாதவர்கள் ஆகையால், அவர்கள் பகல் முழுவதும் தங்கள் குடிசையிலேயே கண் மறைவாய் இருந்துவிட்டு, இரவானதும் தங்கள் தேவைக்காக வெளியே வருவார்கள்; அப்போது உயர் சாதியினர் தங்களைப் பார்த்துவிடும் பட்சத்தில், அவர்களுக்கு அபச்சாரம் ஆகிவிடக் கூடாது என்ற நோக்கில், இந்த நாயாடிகள் குலவை போன்றதோர் எச்சரிக்கை ஒலியெழுப்பி விட்டு வெளியே வருவார்கள்; கடைகளில் ஏதேனும் வாங்க நேர்ந்தால் கடையின் முன் ஒரு வாழையிலையில் அதற்கான பணத்தை வைத்துவிட்டு அருகில் போய் ஒளிந்து கொள்வார்கள்; கடைக்காரர் பணத்தை எடுத்துக்கொண்டு, அதற்கான பொருளை வைத்து விட்டு உள்ளே சென்ற பின்னர் அப்பொருளை எடுத்துக்கொண்டு திரும்புவார்கள்" என்று ராஜாஜி விளக்கமாகச் சொன்னார். இதைக் கேட்டு அதிர்ந்து போன காந்தியடிகள், இப்படிப்பட்ட மக்களுக்காகவா விடுதலை கேட்டுப் போராடிக் கொண்டிருக்கிறோம் என்று மயங்கினார். யார், யாருக்கு விடுதலை தருவது என்பதில் அவருக்குத் தீராத குழப்பம் இருந்தது.



காந்தியடிகள் மீண்டும் 1936 ஆம் ஆண்டில் கோயில் நுழைவுப் பிரகடனத்திற்காகக் கேரளா வந்தபோது, கோயில் யாருக்காக இதுவரை திறக்கப்படாமல் அதன் கதவுகள் அடைக்கப்பட்டு இருந்ததோ, அந்தப் புலையர்கள் கோயிலுக்குள் நுழைவதைக் காண விரும்பினார். "இங்கு யார் புலையர்?" என்று காந்தி கேட்ட போது, "யாருமே புலையர்கள் இல்லை" என்று பதில்தான் அவருக்குக் கிடைத்தது. தீண்டப்படாதோர், காணப்படாதோர் எல்லாம் மதம் மாறிப் போனதினாலேயே, கோயில் கதவுகளைத் திறந்து வைத்தும் ஒரு புலையரும் உள்ளே நுழையவில்லை. இத்தனைப் போராட்டங்கள் நடத்தியும், கோயில் கதவுகளைத் திறந்து வைத்தும் கூட, ஒரு புலையரும் உள்ளே நுழைவதைக் காண முடியாத நிலையை எண்ணிக் கண்ணீர் வடிக்கத்தான் காந்தியடிகளால் முடிந்தது. இந்தக் கோயில்களுக்கு இனி கதவுகள் ஏனோ என்று கூட அவர் வருந்தி இருக்கலாம். அதனால் புலையர்களும், அவர்களைப் போன்றே நடத்தப்பட்ட ஆதிதிராவிட மக்களும் அவருக்குக் கடவுள் மக்களாகத் தெரிந்தனர். அதனால் அவர்களை அரிசன் என்று காந்தி அழைத்தார். அப்படியாவது அவர்கள் கோவிலுக்குள் நுழைய முடியும்

என்று அவர் நினைத்திருக்கலாம். அதற்காக "அரிசன மகா சங்கம்" என்று ஓர் இயக்கத்தை அவர் தொடங்கினார். இந்திய அளவில் அவ் இயக்கமும் வளர்ந்தது. தீண்டாமையை ஒழிக்க வேண்டும் என காந்தி விரும்பினாரே ஒழிய, தீண்டாமையை உருவாக்கிய, அதைப் பேணிப் பாதுகாத்துக் கொண்டிருக்கும் சனாதனத்தை அடக்கவும், அழிக்கவும் அவர் முயலவில்லை. அவ்வளவு ஏன், சனாதனத்தை நோக்கி ஒரு கேள்வி கேட்கக் கூட அவர் விரும்பவில்லை. வெற்று இயக்கத்தை நம்பியே அரிசன மக்கள் தன்னை நோக்கி வருவார்கள் என்று அவர் நம்பியது தவறாகிப் போனது. அத்துடன் பார்ப்பன, பனியா உயர் சாதியினர், தன் தீண்டாமை ஒழிப்புக் கருத்துகளால் கவரப்படுவார்கள் என்று அவர் நம்பியதும் தவறாகிப் போனது.

கேரளாவில் இந்தியத் தேசிய காங்கிரஸ் கட்சி கால்பதிப்பதற்கு வைக்கம் போராட்டமே காரணமானது. அதே நேரத்தில் தமிழ்நாட்டில் காங்கிரஸ் கட்சியின் பின்னடைவுக்கும் அதுவே காரணமானது. கேரள காங்கிரசின் அழைப்பின் பேரில் வைக்கம் சென்று போராட்டத்தில் கலந்து கொண்ட பெரியார், போராட்டத்தைத் தீவிரப் படுத்தவும், போராட்டத்திற்கான நிதி சேர்க்கவும் பெருமுயற்சி எடுத்துக் கொண்டிருந்த வேளையில், போராட்டத்திற்கு நிதியுதவி வரும் வழிகளை காந்தியடிகள் தன்னுடைய அறிக்கையால் அடைத்துவிட்டார். சத்தியாகிரகப் போராட்டம் என்பதால் போராட்டத்தைத் தீவிரப் படுத்தும் திட்டத்தைக் காந்தியடிகள் ஏற்கவில்லை. போராட்டமும் நடத்த வேண்டும்; திருவாரூர் சமஸ்தானத்துடன் நட்பும் பாராட்ட வேண்டும் என்ற இழுபறிக் கொள்கையால் போராட்ட வேகம் தடைபட்டுக் கொண்டே வந்ததை பெரியார் விரும்பவில்லை. மேலும் சத்யாக்கிரகம் என்னும் காந்தியக் கோட்பாட்டைப் பரிசோதனை செய்யும் களமாக வைக்கத்தை காந்தி ஆக்கியதானது, கேரள காங்கிரஸ் தலைவர்களைப் போலவே, பெரியாருக்கும் பிடிக்கவில்லை. வைக்கம் போராட்டத்திற்குத் தீர்வு காண திருவாங்கூர் சமஸ்தான காவல் ஆணையர் பிட் *(W.H. Pitt)* என்பவருக்குக் காந்தியடிகள் கடிதம் எழுதி, அவருடைய ஏற்பாட்டில் திருவாங்கூர் சமஸ்தானம் ஒப்பந்தம் கையெழுத்தானதும் போராட்டக்காரர்களுக்கு ஒரு நெருடலை ஏற்படுத்தியது. ஆனாலும் 'மகாத்மா' எனும் ஒளிவட்டப் போதைக்கு அனைவருமே மயங்க வேண்டியதாயிற்று.

வைக்கம் போராட்டம் முடிந்து தமிழ்நாடு திரும்பிய பெரியார், தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராகத் தன் பணியைத் தொடர்ந்தார். சென்னை மாகாணத்திற்கு எதிர் வரும் தேர்தல்களில், ஒருவேளை காங்கிரஸ் கட்சி வெற்றி பெற்று அரசாங்கம் அமைத்தால், வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தைச் சட்டமாக்க வேண்டும் என்றும் கோரிக்கை விடுத்தார். வைக்கம் போராட்டத்தின் படிப்பினையாகவும், எதிர்வினையாகவும் கூட பெரியார்

வைத்த இக்கோரிக்கை விளங்கியது. அதைக் காங்கிரஸ் மாநாட்டில் தீர்மானமாகவும் பெரியார் கொண்டு வந்தார். ஆனால் காங்கிரஸ் தலைவராக அவர் கொண்டு வந்த இந்தத் தீர்மானம், காங்கிரஸ் மாநாடுகளிலேயே பலமுறை தோற்கடிக்கப்பட்டதால் அவர் காங்கிரசை விட்டு வெளியேற வேண்டியதாயிற்று. 1924 ஆம் ஆண்டில் காந்தியின் எல்லாக் கொள்கைகளுக்கும் கட்டுப்பட்டு இருந்த பெரியார், 1925 ஆம் ஆண்டிலேயே காங்கிரசில் நிலவிய சாதி மேலாதிக்கத் தன்மையைக் கண்டித்துக் காங்கிரசிலிருந்தே வெளியேறினார். அதனுடைய விளைவாகத்தான், அப்போது பெரியார் நடத்திக் கொண்டிருந்த குடியரசு இதழ் வழியாகச் சுயமரியாதை இயக்கம் உருவானது. 1925 ஆம் ஆண்டு வரையில் காங்கிரஸ் தலைவராகப் பணியாற்றிப், பின் நாட்களில் திராவிட இயக்கத்தின் பிதாமகனாக பெரியார் தமிழக வரலாற்றில் நிலை பெற்றதற்கு வைக்கம் போராட்டமும் ஒரு காரணமே.



வைக்கம் போராட்டம் இந்தியச் சமூகங்களிலும், அரசியலிலும் ஒரு குறிப்பிடத்தக்க விளைவை ஏற்படுத்தியது. இந்திய விடுதலை இயக்கம் தீவிரமாகச் செயல்பட்டு வந்த காலத்தில் சமத்துவத்திற்கும், சமூகச் சீர்திருத்தத்திற்கும் அவசியமானதும், வன்முறையற்ற சமூக மாற்றத்தைக் கொண்டு வருவதற்கு ஒரு முன் உதாரணமாகவும் வைக்கம் போராட்டம் திகழ்ந்தது. கேரளாவில் "நாராயண தர்ம பரிபாலன யோகம்" (Sri Narayana Dharma Paripalan Yogam) என்ற சமூகச் சீர்திருத்த அமைப்பு தொடங்கப்பட இப் போராட்டம் காரணமாகியது. இவ்வமைப்பு கேரளாவில் இந்து மதத்திற்குள் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் சமத்துவத்திற்கான சேவைகளைச் செய்து வந்தது. இத்தகைய நடவடிக்கைகளினால் "வைக்கம் போராட்டம், சமுதாயச் சீர்திருத்த இயக்கமாகப் பரிணமிக்காமல், இந்து மதச் சீர்திருத்த இயக்கமாக மாறிவிட்டது" என்ற மதிப்பீட்டைத் தான் வரலாற்று ஆர்வலர்களிடமிருந்து பெற முடிந்தது.

மேற்குலக நாடுகளில் மட்டுமே பெண்கள் குறித்த விவாதங்களும், போராட்டங்களும் தொடங்கியிருந்த காலத்தில், வைக்கம் போராட்டத்தில் தென்னிந்தியப் பெண்கள் பெருமளவில் கலந்து கொண்டது அன்றைய பிரிட்டிஷ் இந்திய ஆட்சியாளர்களையும் வியக்க வைத்தது. இந்தியாவில் முதல்முறையாகப் பெண்கள் கலந்து கொண்ட இப்போராட்டம், நாட்டின் சமூக, அரசியல் அக்கறையுள்ள பெண்களின் எழுச்சியை

*வெளிப்படுத்தியதுடன், முன்மாதிரி சமுதாயத்தைக் கட்டியமைக்கும் வரலாறு பெண்களால் தொடங்கப் பட்டு விட்டதையும் உறுதி செய்தது. இவற்றையெல்லாம் இந்தியச் சமூகம் விழித்துப் பார்த்தது. பெண்களிடம் உள்ள தலைமைப் பண்பைப் போராட்டத்தில் ஈடுபட்ட பெண்கள் வெளிப்படுத்தினர். இது பின் நாட்களில் இந்தியாவில் மலர இருந்த பெண்ணுரிமை இயக்கத்தை அடையாளப்படுத்தியது. திருவாளர்கள் நாராயணியம்மாள், மீனாட்சியம்மாள், திருமலைமம்மாள், நாகம்மாள் (பெரியார் மனைவி) போன்றோர் முன்வரிசை களப்போராளிகளாக நின்றனர். போராட்டத் தலைவர்களின் மனைவிகளாக இவர்கள் அறியப்பட்டாலும், அதை அடையாளப்படுத்த தேவையில்லாத செயல் வேகத்தையும், ஈடுபாட்டையும் அவர்கள் கொண்டிருந்தனர்.*

*ஒடுக்கப்பட்டவர்களின் உரிமைக்கான ஓர் எழுச்சியை, கேரளாவில் மட்டுமல்ல, இந்தியா முழுமைக்கும் விதைத்த பெருமையும் வைக்கம் போராட்டத்திற்கு உண்டு. இதன் பின்விளைவாக இந்திய "தலித் சிறுத்தைகள் இயக்கம்" (Dalit Panther of India) உருவானதைக் கூறலாம். ஒரு பக்கம் தீண்டாமைக்கெதிரான உரிமைக் குரல்கள் பலமாக ஒலித்தன என்றாலும், இருபத்தோராம் நூற்றாண்டில் தலித் இயக்கங்கள் அதையே வெறும் இந்துமதச் சீர்திருத்தமாக மட்டுமே கருதும் நிலையும் உருவெடுத்திருக்கிறது. "வைக்கம் போராட்டக் காலத்தில் கோயில் நுழைவுக்காகப் போராடாமல் அப்படியே விட்டிருந்தால் நாங்கள் எல்லாம் மதம் மாறி இருப்போம்; குறிப்பாக, பௌத்தம் தழுவி இருப்போம்; ஆனால் கோயில் நுழைவு என்ற 'கருணை'யைச் செலுத்தி தலித்துகளை இன்னும் இந்துமத அடிமைகளாகவே நீடிக்க வைத்து விட்டார்கள்" என்ற பார்வையும் பரவலாகப் பேசப்பட்டு வருகிறது.*

*இந்திய சமூக, அரசியல் வரலாற்றில் 1925 ஆம் ஆண்டு மிக முக்கியமான ஆண்டாக அமைந்திருக்கிறது. ஆட்சியாளர்களும், அரசாங்கமும் பிரிட்டிஷ் ஆளுகையின் கீழிருக்க, வலதுசாரி, இடதுசாரி இயக்கங்கள் உருவான ஆண்டாக அது அமைந்து போனது. பிரிட்டிஷ்காரர்களால் அரசாங்கத்திற்குச் 'சலாம்' போடும் வலதுசாரி இயக்கமாக உருவாக்கப்பட்ட காங்கிரஸ் இயக்கம், பின்னர் இந்தியர்களின் அரசியல் கட்சியாக உருவெடுத்தது. பார்ப்பனர் அல்லாத இடதுசாரிச் சிந்தனையாளர்களால் தீண்டாமைக்கெதிரான கருத்துகளும், போராட்டங்களும் அவ்வப்போது காங்கிரஸ் கட்சியால் முன்னெடுக்கப்பட்டும், காங்கிரசின் பார்ப்பனிய மேலாதிக்கம் தொடர்ந்து வலதுசாரிச் சிந்தனைகளாலேயே ஆளப்பட்டு வந்தது. "காங்கிரஸ் சோஷலிசம்" என்னும் பூச்சாண்டி முகமூடியின் மூலம், இடதுசாரிகளையும் கவர்ந்து தனக்குள் சிறையிட்டு வைத்தது.*

*1925 ஆம் ஆண்டில், கான்பூரில், சிந்தனைச் சிற்பி சிங்காரவேலர் தலைமையில் நடைபெற்ற கம்யூனிஸ்ட் மாநாடு மூலம், இந்தியாவில் உண்மையான இடதுசாரிச் சிந்தனைகள் பெருமளவில் இயக்கமாக மாறத் தொடங்கின. 1925 ஆம் ஆண்டில், காங்கிரசில் இருந்து விலகிய பெரியார், 'குடியரசு' இதழ் வழி, சுயமரியாதை இயக்கம் என்னும் பார்ப்பனியத்திற்கு எதிரான இடதுசாரி இயக்கத்தைக் கட்டமைத்தார். பொதுவுடைமை இயக்கத்தின் ஒலிபெருக்கியாகச் சுயமரியாதை இயக்கம் இயங்கியது. 1925 ஆம் ஆண்டில் டாக்டர் அம்பேத்கரின் அரசியல் நுழைவு, சாதிய ஏற்றத்தாழ்வு மற்றும் இந்துத்துவ மேலாதிக்கத்திற்கு எதிரான இடதுசாரி இயக்கமாகப் பின் நாட்களில் வளர்ந்து வந்தது. ஆனால் அதே 1925 ஆம் ஆண்டில் முழுமையான வலதுசாரி, பாசிச இயக்கமாக ஆர்.எஸ்.எஸ். என்னும் இந்துத்துவ இயக்கம், அமைப்பு ரீதியாகத் தொடங்கப்பட்டு, இன்று இந்து ராஷ்டிரமாக, இந்து பயங்கரவாதமாக, மிகவும் வலுவாகக் கால் ஊன்றி நிற்கிறது. இனி மதவாதம் (வலதுசாரி) வெல்லுமா; சமத்துவம் (இடதுசாரி) தழைக்குமா என்ற மில்லியன் டாலர் கேள்விக்கான பதில், மேற்கூறிய அத்தனை இயக்கங்களின் நூறாவது ஆண்டான 2024 மலரும் போது தெரிந்து விடும். இருபத்தோராம் நூற்றாண்டு முழுமைக்குமான கால சமூக, அரசியல் நிலைப்பாட்டின் புதிய அரசியல் அமைப்பு, வைக்கம் போராட்டத்தின் விதையா அல்லது 2024 ஆம் ஆண்டின் தேர்தல் வெற்றியா என்பதையும் அந்தப் பதிலே தீர்மானிக்கும்.*

**சான்றுகள்:**

*1.மகாத்மா காந்தி, சமஸ்தானப் பிரச்சனை, தினமணி விசேஷ வெளியீடு, சென்னை, 1947.*

*2.சாமி சிதம்பரனார், "தமிழர் தலைவர் பெரியார் ஈ.வெ.ரா. வாழ்க்கை வரலாறு", பாகம் 1, பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன வெளியீடு, சென்னை, 2009.*

*3."விடுதலை" இதழ்கள், 8.1. 1959, 31. 3. 2023.*

*4."வைக்கம் போராட்டம் - தந்தை பெரியார் நினைவலைகள்", விடுதலை ஞாயிறு மலர், 2.4.2023.*

*5.முனைவர் பழ. அதியமான், "வைக்கத்திற்கும் பெரியாருக்கும் என்ன சம்பந்தம்?", கட்டுரை, விடுதலை, 1.4.2023.*

*6. V. Anaimuthu, Thoughts of Periyar E.V.R., Periyar E.V.Ramasamy – Nagammai Education and Research Trust, Chennai, 2009.*

# *இராவண காவியத்தின் காவியச் சுவை பகுதி - 2*

***- கவிஞர் கனிமொழி , வழக்கறிஞர், வெர்ஜினியா.***



*மருதம் என்பது வயலும் வயல் சார்ந்த இடமும் ஆகும் என்பதை அறிந்திருப்போம். அந்த மருத நிலத்தின் காட்சிகளைப் பற்றிப் புலவர் குழந்தை பல பாடல்களில் படம் பிடித்துப் படிக்கத் தருகின்றார். அதில் ஒரு காட்சியைக் கீழ்க்கண்டப் பாடலில் காணலாம்.*

*மழுக்குதா ராக்குஞ் சுக்கு வாத்திளங் குஞ்சு நீத்தம்*
*பழக்கவக் காட்சி யைத்தாய் பார்த்துள மகிழு மோர்பால்*
*வழக்குறு மக்க ளுண்டு வழிச்செல விளநீர்க் காயைக்*
*கொழுக்கவுண் டலுத்துப் போன குரக்கினம் பறித்துப் போடும்.*

*நீந்தத் தயங்கும் தாராக் குஞ்சுக்கு வாத்தின் இளங் குஞ்சுகள் நீந்தப் பழக்கும் காட்சி கண்டு தாய் வாத்து மகிழ்ச்சி கொள்ளும். நடைப்பயணம் செய்வோர் அந்த நிலத்தில் உள்ள இளநீரை தாகம் தீர உண்பர். அந்த இளநீர்க் காயை நன்கு கொழுக்க உண்டு அலுத்துப் போன குரங்குக் கூட்டம் பறித்துக் கீழே தரையில் போடும் என மருத நிலக் காட்சியைக் காட்சிப்படுத்தியிருப்பார் புலவர்.*

*நெய்தல் நிலத்தில் பொன் போன்ற நிறம் கொண்ட மலர்களை வுடைய புன்னை மரங்கள் வளர்ந்து நிற்கும். கடற்கரையின் அருகே உள்ள நீர்ப் பகுதியில் முதலைகள் நிறைந்திருக்கும். உப்பங்கழியில் இணை பிரியாது வாழும் அன்றில் என்ற நீர்ப்பறவை தன் இணையான ஆண் பறவையுடன் தாழை மடலில் அமர்ந்து ஊஞ்சலாடிக் கொண்டிருக்கும் என்பதை புலவர் குழந்தை இவ்வாறு எழுதுகிறார்.*

*பொன்னென மலருந் தூய புன்னையங் கான லாங்கண்*
*முன்னிய வலிய கோள்வல் முதலைய மதலை யுப்பு*
*மன்னுநீள் கழிக்கண் மூத்த மகன்றிலம் புணர்ச்சி வாய்ந்தார்*
*தன்னிகர் கொண்க னோடு தாழைவீ ழூச லாடும்.*

*இப்படிப்பட்ட வளமான நிலங்களான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் , பாலை ஆகியவற்றைப் பெற்று பண்டையத் தமிழ் நிலம் பெருவளநாடு, தென்பாலிநாடு, திராவிடம், சேரம், சோழம் ஆகிய அய்ந்துப் பகுதிகளைக் கொண்டு விளங்கியது என இராவண காவியம் கூறுகிறது.*

*தமிழகக் காண்டத்தில் தமிழகப் படலத்தின் சில பாடல்களைச் சுவைத்தோம். இனி மக்கட் படலம் பற்றிய செய்திகளைக் காண்போம். இந்தப் படலம் தமிழ்*

நாட்டின் நிலப்பகுதியில் வாழ்ந்த மக்களையும் அவர்கள் செய்த தொழில்களையும் கூறுகிறது. அந்தணர், வணிகர், உழவர், இவர்களோடு தச்சர், கொல்லர், குயவர், கன்னார், வேதர், கல் தச்சர் முதலியோர் பற்றியும் இயம்புகிறது. இவ்வாறு வேறுபட்ட தொழில்கள் செய்தாலும் அவர்களின் தொழிலால் ஏற்ற இறக்கம் மக்களிடையே காண்பதோ, ஆண்டான் அடிமை எனும் கொடிய வழக்கமோ தமிழ் மக்களிடம் இல்லை என்பதை இந்தப் பாடல் கவினுற விளக்குகின்றது.

ஈங்குசெய் தொழிலி னாலே யினப்பிரி வானா ரன்றி
ஆங்கவர் தம்மு ளாண்டா னடிமையாங் கொடுமை யின்றிப்
பாங்குறு தொழிலுக் கேற்ற பயனையவ் வவரே யெய்தி
ஓங்கிய செல்வத் தாராய் ஒருகுறை யின்றி வாழ்ந்தார்.

என்று தமிழர்கள் பாங்குடன் தொழில்கள் செய்து ஓங்கிய செல்வம் பெற்று விளங்கினர் என்பதை இறுதியடிகள் விளக்குகின்றன.



தமிழர்கள் எவ்வாறு இன்புற்று வாழ்ந்து வந்தனர் எனவும் பிறருக்கு உதவி செய்து வாழ்ந்து வந்தனர் எனவும் புலவர் கூறுகையில் இவ்வாறு பாடுகின்றார். சொற்சுவையும் பொருட்சுவையும் செய்யுளோசையும் நிரம்பிய வரிகள் கீழே தரப்பட்டுள்ளன.

அன்பாகி யருளாகி யறிவாகி யுலகுயிரின்
முன்பாகி யொளியாகி முதலாகி முடியாத
இன்பாகி யியல்கின்ற இறைவாழ்த்தி முறைவாழ்ந்தார்
தன்போலப் பிறவாழ்வு தனைப்பேணும் பழந்தமிழர்.

பழந்தமிழர் நட்புள்ளமும் சுற்றம் தழுவி வாழும் உறவுரிமையும் சான்றாண்மையும் பொது அறிவும் உயிர் பற்றிய உடல் பற்றிய அறிவும் உடல்

வலிமையும் முயற்சியுடைமையும் பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்தனர் என்பதனை,

*கேண்மையிடை யறாவுளமுங் கிளைதழுவுங் கிழமையுஞ்சான்*
*றாண்மையொடைம் பூதவுல கறிவுமுயிர் மெய்யறிவும்*
*தோண்மையுந் தாளாண்மையு நற்றுணையுறவே நனிவாழ்ந்தார்*
*நாண்மைநிலை யறிந்துதக நடந்துநலம் பெறுதமிழர்.*

திருக்குறள் செப்பிய அறக் குணங்கள் அனைத்தும் பெற்று பண்டையத் தமிழர் வாழ்ந்தனர் என்பதை மேற்கண்ட பாடலின் மூலம் அறிந்து கொள்ள இயலும். அந்தப் பாடலில் பயின்று வந்துள்ள எதுகை மோனை ஓசை நயத்தையும் புரிந்து காவியப் பாடலைச் சுவைக்கலாம்.



தமிழ்நாட்டின் மக்கள் எத்தகைய வளமான மண்ணைப் பெற்றிருக்கின்றனர் எனக் கூறும்போது, ஒரு வேலி வயல் நிலம் இருந்தாலும் அதில் ஆயிரம் கலம் நெல் விளையுமாறு உயர்ந்த மலையிலிருந்து ஒலி எழுப்பி வரும் ஆற்று வளம் நிறைந்த மண்ணைப் பெற்றவர்கள் தமிழர்கள். அவர்களிடம் ஆயிரம் பொன் கூலியாகக் கொடுத்தாலும் நேர்மையற்ற செயல்களைச் செய்யாதவர்கள் என்பதை எழிலான வரிகளில் புலவர் குழந்தை எழுதுகிறார்.

*கூலியா யிரங்காணங் கொடுக்கினுமே கோலொருவும்*
*போலியா ரெனுமுரையைப் பொய்யாக்கி மெய்ந்நின்றார்*
*வேலியா யிரங்கலநெல் விளைவுயர் மலையிலெழுந்*
*தாலியா வருமொலிய லனைவளற்றுந் தமிழ்நாடர்.*

காவியச் சுவை தொடரும்…

# *என் மனதிற்கினிய மாயா!*

**மேனகா நரேஷ்**,
*நியூஜெர்சி.*



*புகழ்பெற்ற அமெரிக்கக் கவிஞரான மாயா ஏஞ்சலோ, எழுத்தாளர், சுயசரிதையாளர், சமூக ஆர்வலர், பாடகி, நடனக் கலைஞர், நடிகை, இசையமைப்பாளர் மற்றும் ஹாலிவுட்டின் முதல் பெண் கறுப்பின இயக்குநர் என்று பன்முகத்தன்மையுடன் இயங்கியவர்.*

*ஆனால் எழுத்தாளர், கட்டுரையாளர், நாடக ஆசிரியர் மற்றும் கவிஞராக மிகவும் பிரபலமாக அறியப்பட்டு அமெரிக்க எழுத்து உலகில் புகழ்பெற்று விளங்கியவர். இவர் மிசோரி மாநிலத்தின் செயின்ட் லூயிஸ் நகரத்தில் ஏப்ரல் 4, 1928 ஆம் ஆண்டு பிறந்தார். இவருடைய இயற்பெயர் மார்குரைட் ஜான்சன். சிவில் உரிமை ஆர்வலராக டாக்டர் மார்ட்டின் லூதர் கிங் ஜூனியர் மற்றும் மால்கம் எக்ஸ் ஆகியோரிடம் பணிபுரிந்த அனுபவம் இவருக்கு உண்டு . கல்வியாளராக வேக் ஃபாரஸ்ட் பல்கலைக்கழகத்தில் அமெரிக்க ஆய்வுகளின் ரெனால்ட்ஸ் பேராசிரியராக பணியாற்றினார். 2000 ஆம் ஆண்டில் அமெரிக்காவின் உயரிய தேசிய கலைப்பதக்கம் (National Medal of Arts) ஏஞ்சலோவிற்கு அமெரிக்க அதிபர் பில் கிளிண்டனால் வழங்கப்பட்டது. 2010 ஆம் ஆண்டு பிரசிடென்ஷியல் மெடல் ஆப் ஃபிரீடம் (Presidential Medal of Freedom) என்னும் அமெரிக்காவின் உயரிய விருதை அதிபர் பராக் ஒபாமா ஏஞ்சலோவிற்கு வழங்கி அவரைக் கௌரவித்தார். இவருடைய வாழ்நாளில் 50 கௌரவப் பட்டங்களை பல்வேறு பல்கலைக்கழகங்களில் இருந்து பெற்றிருக்கிறார். இத்தனைப் பெருமைக்குரிய மாயா ஏஞ்சலோவின் புகழ்பெற்றப் படைப்பாகக் கருதப்படுவது அவர் எழுதிய சுயசரிதையான "கூண்டுப் பறவை ஏன் பாடுகிறது என்று எனக்குத் தெரியும்" ( I know why the caged bird sings) என்பதாகும். 1969 ஆம் ஆண்டு வெளியான இந்த சுயசரிதையில் தன் குழந்தைப் பருவத்தின் துயரமான தருணங்களை வலியுடன் பதிவு செய்திருக்கிறார். ஏழு வயதில் தன்னை பாலியல் வன்புணர்வு செய்த நபரை அவருடைய மாமாக்கள் கொன்ற போது, அவன் மரணத்திற்கு, தான் அவனைக் காட்டிக் கொடுத்ததுதான் காரணம் என்று நினைத்து அந்தத் தாக்கத்தில் ஏஞ்சலோ பேசுவதை நிறுத்தினார். ஐந்து வருடங்கள் ஊமையாக இருந்ததையும், இந்தக் காலகட்டத்தில் லேங்ஸ்டன் ஹ்யூக்ஸ், டு பாய்ஸ், பால் லாரன்ஸ் தன்பார் போன்ற கறுப்பின எழுத்தாளர்களின் படைப்புகளையும், வில்லியம் ஷேக்ஸ்பியர், சார்லஸ் டிக்கன்ஸ் மற்றும் எட்கர் ஆலன் போ*

ஆகியோரின் படைப்புகளையும் ஆர்வத்துடன் படித்ததை விவரிக்கிறார். பேசாமல் இருந்த ஏஞ்சலோவை அவருடைய 12ஆவது வயதில் பேச வைத்தது திருமதி ஃபிளவர்ஸ் என்ற கறுப்பினப் பெண்மணி. இவர்தான் பேசும் வார்த்தையின் முக்கியத்துவத்தை வலியுறுத்தி, கல்வியின் அத்தியாவசியத்தை விளக்கி, கவிதையின் மீதான காதலை ஏஞ்சலோவிற்குள் விதைத்தவர்.

1950 களில் ஹார்லெம் எழுத்தாளர்களின் அமைப்பில் ஏஞ்சலோ உறுப்பினராகச் சேர்ந்தார். அப்போது எழுத்தாளர் ஜேம்ஸ் பால்ட்வின் மற்றும் சமூக ஆர்வலர் டாக்டர் மார்ட்டின் லூதர் கிங் ஆகியோரின் அறிமுகம் இவருக்குக் கிடைத்தது. இந்தக் காலகட்டத்தில் இரவு விடுதிகளில் கலிப்சோ இசையைப் பாடும் பாடகியாகவும் அவர் செயலாற்றினார். இதற்காக அவர் பல பாடல்களை எழுதினார். இப்பாடல்கள் பின்னால் அவரது கவிதைத் தொகுப்புகளிலும் சேர்க்கப்பட்டன.

**மாயா ஏஞ்சலோவின் கவிதைகள்:**

மாயா ஏஞ்சலோ தனது கவிதைகளின் வழியே காதல், வலி மிகுந்த இழப்புகள், இசை, பாகுபாடு, இனவெறி, வாழ்க்கையின் போராட்டங்கள் போன்றவற்றைக் குறித்து ஆழமாக ஆராய்கிறார். ஏஞ்சலோவின் பல கவிதைகள் காதல் மற்றும் உறவுகளைப் பற்றியவை. எடுத்துக்காட்டாக “சாவதற்கு முன் எனக்குக் குளிர்ந்த நீரைக் கொடுத்தால் போதும்”

*(Just Give Me a Cool Drink of Water ‘fore I Diiie )* என்ற கவிதைத் தொகுப்பில் முதல் பகுதியில் உள்ள அனைத்துக் கவிதைகளும் காதலை மையமாகக் கொண்டுள்ளன. அதேபோல் “அசைபவனே நீ ஏன் பாடக்கூடாது?”*(Shaker, Why don’t you sing?)* என்ற கவிதைத் தொகுப்பிலும் பாதிக் கவிதைகள் காதலுடன் வரும் தவிர்க்க முடியாத இழப்பு மற்றும் அழிந்து போன உறவுகளை மையமாகக் கொண்டுள்ளன.



மிதமான எதிர்ப்பும் நகைச்சுவையும் இவருடைய பெரும்பாலான கவிதைகளில் காணப்படுகிறன. குறிப்பாக இவரது முதல் கவிதைத் தொகுப்பில் உள்ள கவிதைகளில் ஒரு போராளியின் தொனி தென்படுகிறது. ஏஞ்சலோவின் கவிதைகள்

*இனவெறி, சிரமங்கள், மற்றும் சவால்களுக்கு மத்தியில் தப்பிப் பிழைத்தவர்களைக் கொண்டாடுகின்றன.*

*இசை மற்றும் இசை வடிவங்களுடன் இவரது கவிதைகள் ஒப்பிடப்படுகின்றன. குறிப்பாக ப்ளூஸ் எனப்படும் இசை வகையுடன் ஒத்துப் போகின்ற இவரது கவிதைகள் உறவுகள் மற்றும் துன்பங்களைச் சமாளித்தல் போன்ற கருப்பொருள்களை உள்ளடக்கியதாக இருக்கின்றன. ப்ளூஸ் பாடகர்களைப் போலவே எரிச்சல் சோகம் மற்றும் பெரும் துன்பங்களைச் சமாளிக்கக் கண்ணீருக்குப் பதிலாகச் சிரிப்பு அல்லது நையாண்டியை அவரது கவிதைகளில் பயன்படுத்தி இருக்கிறார்.*

*இவரது நான்காவது கவிதைத் தொகுப்பான "அசைபவனே நீ ஏன் பாடக்கூடாது", பிரெஞ்சு பாடகர் ஈடித் பியாஃப் இசையுடன் ஒப்பிடப்பட்டது. இந்தத் தொகுப்பில் சிறப்பான கவிதைகளாகக் கருதப்படும் அனைத்துக் கவிதைகளிலும் ப்ளூஸ் இசையின் தாக்கம் வெளிப்படுகிறது என்பது கவிதை விமர்சகர்களின் கருத்தாக இருக்கிறது. விமர்சகர் ஹரோல்ட் ப்ளூம் ஏஞ்சலோவின் கவிதைகளைப் பகுப்பாய்வு செய்யச் சிறந்த வழி ப்ளூஸ் இசையை அடிப்படையாகக் கொண்டு செயல்படுவதே ஆகும் என்று குறிப்பிடுகிறார்.*

*விமர்சகர் வில்லியம் சில்வெஸ்டர் ஏஞ்சலோவின் கவிதைகளில் உள்ள சில உருவகங்களை மற்ற கறுப்பின மக்கள் புரிந்து கொள்ளும் வகையில் அமைந்த குறியீடுகள் என்று குறிப்பிடுகிறார். உதாரணமாக "செப்பியா ஃபேஷன் ஷோ" (Sepia Fashion Show) என்ற அவரது கவிதையின் கடைசி வரிகளில்,*

> *"நான் அவர்களுக்கு நினைவூட்டுகிறேன்*
>
> *அந்த முழங்கால்களைப் பாருங்கள்*
>
> *உங்களுக்கு மிஸ் ஆனின் சுத்திகரிப்பு கிடைத்தது"*

*இதில் வரும் "மிஸ் ஆன்" என்ற குறியீடு ஆப்பிரிக்க-அமெரிக்கச் சமூகத்தில் ஒரு திமிர்பிடித்த ஐரோப்பிய-அமெரிக்கப் பெண்ணை குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு வெளிப்பாடு ஆகும். வாசகர்களின் உணர்ச்சிகளில் தாக்கத்தை ஏற்படுத்த ஏஞ்சலோ இந்த நுட்பத்தைக் கையாள்கிறார் என்று சில்வெஸ்டர் கூறுகிறார்.*

*அவரது கவிதைகளில் காணப்படும் உருவகங்கள் கறுப்பினத்தவர் புரிந்து கொள்ளும் வகையில் அவர்களுக்கான பிரத்தியேகக் குறியீடுகளாக அமைந்திருந்தாலும், அவர் கையாளும் கருப்பொருள்கள் அனைத்து இனங்களுக்கும் பொதுவானவையாகவே இருக்கின்றன என்று விமர்சகர்கள்*

மதிப்பிடுகிறார்கள். அவர் படைப்புகள், கறுப்பின மக்களின், குறிப்பாகப் பெண்களின் செய்தி ஊடகமாகத் திகழ்ந்து அவர்களது கலாசாரத்தைப் பாதுகாத்தவையாகக் கருதப்படுகின்றன.

மாயா ஏஞ்சலோவின் கவிதைகளால் ஈர்க்கப்பட்டவர்களுள் நானும் ஒருத்தி. மீண்டும் மீண்டும் அவர் கவிதைகளை வாசிக்கும் பழக்கம் எனக்கு உண்டு. மாயாவை என் மனதிற்கினியத் தோழியாய், சகோதரியாய், ஆசிரியராய் அவருடைய கவிதைகள் அடையாளம் காட்டுகின்றன. என்னை மிகவும் பாதித்த மாயா ஏஞ்சலோவின் இரண்டு கவிதைகளை உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்.



"நான் இன்னும் எழுகிறேன்" *(And Still I Rise)* என்பது அமெரிக்காவில் ஒரு கறுப்பினப் பெண்ணாக மாயா ஏஞ்சலோவின் அனுபவங்களை அடிப்படையாகக் கொண்ட ஒரு எழுச்சியூட்டும் உணர்ச்சிகரமான கவிதை. இந்தக் கவிதை கறுப்பினப் பெண்களின் வலிமை, மன உறுதி மற்றும் தைரியத்தைக் கொண்டாடும் சக்தி வாய்ந்தக் கவிதையாகக் கருதப்படுகிறது. சவால்களைக் கண்டு துவளாமல் நம்பிக்கையுடன் செயலாற்ற வேண்டும் என்பதே இந்தக் கவிதையின் மையச் செய்தி. அடையாளம் மற்றும் கொண்டாட்டம் ஆகிய கருப்பொருள்களை உள்ளடக்கிய கவிதையாக இது திகழ்கிறது.

இந்தக் கவிதையின் தமிழாக்கம்:

""நான் இன்னும் எழுகிறேன்""

> உனது திரிக்கப்பட்ட, கசப்புமிகு பொய்களால்
> வரலாற்றில் என்னை நீ எழுதிக் கொள்ளலாம்
> மிகுந்த அழுக்கினுள்ளே என்னை நீ மிதிக்கலாம்
> எனினும் தூசிபோல நான் எழுவேன்
>
> என் உடல்வசீகரத்தன்மை உன்னை நிலைகுலையச் செய்கிறதா?
> ஏன் நீ துயரத்தால் கட்டப்பட்டுள்ளாய்?

*என் வரவேற்பறையில் ஏதோ*
*எண்ணெய்க் கிணறுகள் தளும்பிக்கொண்டிருப்பதுபோல*
*நான் நடப்பதாலா!*

*நிலாக்களைப் போலவும் சூரியன்களைப் போலவும்*
*அலைகளின் நிச்சயத்தன்மையுடன்,*
*நம்பிக்கைகள் உயரப் பறப்பதைப் போல,*

*நீ என்னை உடைந்துபோய் பார்க்க வேண்டுமா?*
*குனிந்த தலையும் தாழ்ந்த கண்களுமாய்?*
*என் ஆன்மாநிறைந்த அழுகைகளால் பலகீனமாகி,*
*கண்ணீர்த்துளிகளைப்போல தோள்கள் கீழே விழுந்தபடி..?*

*என் இறுமாப்பு உன்னை அச்சுறுத்துகிறதா?*
*என் வீட்டுக் கோடியில்*
*தங்கச் சுரங்கம் கிண்டப்பட்டுக்கொண்டிருப்பதுபோல*
*நான் சிரித்துக்கொண்டிருப்பதை*
*நீ மிகக் கடினமாய் உள்வாங்கிக் கொள்கிறாயா?*

*உன்னுடைய சொற்களால் எனை நீ சுடலாம்*
*உன்னுடைய கண்களால் எனை நீ வெட்டலாம்*
*உன் வெறுப்புமிகுத்தன்மையால் எனை நீ கொல்லலாம்*
*எனினுங் கூட, காற்றைப் போல, நான் எழுவேன்*

*என் கவர்ச்சி உன்னை நிலைகுலையச் செய்கிறதா?*
*என் தொடைகள் இணைகிற இடத்தில்*
*வைரங்களைக் கொண்டிருப்பவள்போல*
*நான் நடனமிடுவது ஆச்சரியமாய் இருக்கிறதா?*

*வரலாற்றின் இழிவுகளால் ஆன குடிசைகளுக்கு அப்பால்*
*எழுகிறேன்*
*வலியால் வேர்கொண்ட கடந்த காலத்தின் மேலிருந்து*
*எழுகிறேன்*
*நான் பறந்ததும் பாய்தலுமான கருங்கடல்*
*ஊற்றெடுத்தும் பொங்கியும் வெள்ளத்தில் எடுத்துச் செல்லப்படுகிறேன்*

*எனக்குப் பின்னால்*
*திகில்மிகு இரவுகளையும் அச்சத்தையும் விட்டு*

நான் எழுகிறேன்
அற்புதத் தெளிவில் புலரும் விடியலுள்
நான் எழுகிறேன்
என் மூதாதையர்கள் தந்த பரிசுகளைக் கொணர்ந்தபடி,
நான்தான் அடிமைகளின் கனவும் நம்பிக்கையும்.
நான் எழுகிறேன்
எழுகிறேன்
எழுகிறேன்.




"நான் இன்னும் எழுகிறேன்" என்ற கவிதையின் மூலம் சமூகத்தின் வெறுப்பு தன் வெற்றிகளைத் தடை செய்யாது என்ற பிரகடனத்தை ஏஞ்சலோ பகிரங்கமாக முன் வைக்கிறார். தன்னைப் போலவே வாசகர்களையும் ஒடுக்குமுறை மற்றும் பாகுபாடுகளுக்கு அப்பால் எழுந்து நிற்க அழைப்பு விடுக்கிறார். "நான் எழுகிறேன்" என்ற சொற்றொடர் ஒரு ஒற்றை எழுச்சியைப் பற்றியது அல்ல இது ஒரு கூட்டுப் புரட்சிக் குரல்! நீண்ட காலமாக ஒடுக்கப்பட்ட ஒரு வர்க்கத்தின் எழுச்சிமிகு குரல்!

மாயா ஏஞ்சலோவின் “கூண்டுப் பறவை” (Caged bird) என்ற கவிதை விமர்சகர்களால் மிகவும் முக்கியமான கவிதையாகக் கருதப்படுகிறது. இந்தக் கவிதையில் இரண்டு வெவ்வேறு பறவைகளின் அனுபவங்களைக் கவிஞர் விவரிக்கிறார். ஒரு பறவை சுதந்திரமாய்ப் பறந்து திரிகிறது. இன்னொன்று கூண்டில் அடைபட்டுக் கிடக்கிறது. சுதந்திரப் பறவை பறக்கும்போது வானம் தனக்கே சொந்தமானது போல் உணர்கிறது. மறுபுறம், கூண்டில் அடைக்கப்பட்டப் பறவை அதன் சிறையில் அரிதாகவே நகர்கிறது. துன்பத்தின் பிடியில் கோபமாகவும் வெறுப்பாகவும் இருக்கும் இந்தப் பறவையின் இறக்கைகள் வெட்டப்பட்டு அதன் கால்கள் ஒன்றாக இணைக்கப்பட்டிருக்கிறது. பயத்துடனும் மிகுந்த சோகத்துடனும் அந்தக் கூண்டுப் பறவை தன் விடுதலைக்காகப் பாடுகிறது.

***இந்தக் கவிதையின் தமிழாக்கம்:***

*""கூண்டுப் பறவை""*

*ஒரு சுதந்திரப் பறவை காற்றின் முதுகில் பாய்கிறது*
*கீழ்நிலை நீரோட்டத்தில் மிதக்கிறது*
*அது முடியும் வரை*
*பின் அதன் சிறகை நனைக்கிறது*
*ஆரஞ்சு வண்ண சூரியக்கதிர்களில்*
*மேலும் வானத்தை உரிமை கொண்டாடத் துணிகிறது*

*ஆனால் குறுகிய கூண்டினுள்*
*துள்ளிக் குதிக்கும் பறவைக்கு*
*அதன் கோபத்தை உமிழும் கம்பிகளின் வழியே*
*அரிதாகத்தான் பார்க்க முடியும்*
*அதன் இறக்கைகள் வெட்டப்பட்டு இருக்கின்றன*
*அதன் கால்கள் கட்டப்பட்டு இருக்கின்றன*
*எனவே அது தன் தொண்டையைத் திறந்து பாடுகிறது*

*கூண்டில் அடைக்கப்பட்ட பறவை பாடுகிறது*
*தெரியாத விஷயங்களைப் பற்றி*
*பயமுறுத்தும் நடுங்கோலியுடன்*
*தொலைவில் உள்ள மலையில்*
*அதன் இசை கேட்கிறது*
*ஏனென்றால் கூண்டுப் பறவை*
*சுதந்திரத்தைப் பற்றிப் பாடுகிறது*

*சுதந்திரப் பறவை*
*இன்னொரு தென்றலைப் பற்றி நினைக்கிறது*
*மற்றும் தடகாற்று மென்மையாக*
*பெருமூச்சு விடும் மரங்களின் வழியே வருதலையும்*
*கொழுத்த புழுக்கள் ஒரு விடியலின்*
*பிரகாசமான புல்வெளியில் காத்திருப்பதையும் நினைக்கிறது*
*மேலும் வானத்திற்குத் தன் பெயரைச் சூட்டுகிறது*

*ஆனால் ஒரு கூண்டில் அடைக்கப்பட்ட பறவையோ*
*கனவுகளின் கல்லறையில் நிற்கிறது*
*அதன் நிழல் திகிலூட்டும் படி அலறுகிறது*
*அதன் இறக்கைகள் வெட்டப்பட்டு*

அதன் கால்கள் கட்டப்பட்டுள்ளன
அதனால் தொண்டையைப் பிளந்து அது பாடுகிறது

கூண்டில் அடைக்கப்பட்ட பறவை பாடுகிறது
தெரியாத விஷயங்களைப் பற்றி
பயமுறுத்தும் நடுங்கோலியுடன்
தொலைவில் உள்ள மலையில்
அதன் இசை கேட்கிறது
ஏனென்றால் கூண்டுப் பறவை
சுதந்திரத்தைப் பற்றிப் பாடுகிறது

இனவெறி, ஒடுக்குமுறை, சுதந்திரம், சிறைபிடிப்பு, மகிழ்ச்சி, துக்கம் போன்ற கருப்பொருள்கள் அடங்கிய கவிதையாக இக்கவிதை விளங்குகிறது கூண்டில் அடைக்கப்பட்ட பறவை என்பது அமெரிக்காவிலும் உலகெங்கிலும் உள்ள கறுப்பினச் சமூகத்தைக் குறிப்பிடும் உருவகமாகும். அதிகார வர்க்கம் அவர்கள் மீது செலுத்தும் உடல் மன பொருளாதார அடக்குமுறை தந்திரங்களால் பறிக்கப்படும் அவர்களது சுதந்திரத்தைக் குறிப்பிடவே கூண்டுப் பறவை என்கின்ற உருவகத்தை கவிஞர் பயன்படுத்தியிருக்கிறார்.




இந்தக் கவிதையில் வரும் சுதந்திரப் பறவை சம உரிமைகளை அனுபவிக்கும் அனைத்து மக்களையும் குறிக்கிறது. கடைசி வரியில் கூண்டில் அடைக்கப்பட்டப் பறவை சுதந்திரத்தைப் பற்றிப் பாடிக்கொண்டிருக்கிறது

*என்று முடிக்கிறார். கறுப்பின மக்கள் சுதந்திரத்திற்காகவும் சமத்துவத்திற்காகவும் தங்களுடைய உரிமைகளுக்காகவும் தொடர்ந்து போராடிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அழுத்தமாக இந்த வரியில் கவிஞர் பதிவு செய்கிறார்.*

*“எனது வேலை, எனது வாழ்க்கை, நான் செய்யும் அனைத்தும் வாழ்தலைப் பற்றியது. அப்பட்டமான, மோசமான துருப்பிடித்த வாழ்தல் அல்ல. கருணை மற்றும் நம்பிக்கையுடன் வாழ்தலைப் பற்றியது. ஒருவர் பல தோல்விகளைச் சந்திக்க நேர்ந்தாலும் தோற்றுவிடக்கூடாது” என்று மாயா ஏஞ்சலோ குறிப்பிடுகிறார். ஏஞ்சலோ ஏழு சுயசரிதைகள் எழுதியவர் என்பது குறிப்பிடத்தக்கது. ஒரு சுயசரிதை ஆசிரியராக அவர் அனுபவித்த வெற்றியை ஒரு கவிஞராகவும் அனுபவித்துள்ளார் இவரது முதல் கவிதைத் தொகுப்பு சாவதற்கு முன் எனக்குக் குளிர்ந்த நீரைக் கொடுத்தால் போதும்” புலிட்சர் பரிசுக்குப் பரிந்துரைக்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.*



*இங்கிலாந்தின் புகழ்பெற்ற ஸ்டெர்லிங் பதிப்பகம் ஏஞ்சலோவின் 25 கவிதைகளைத் தேர்ந்தெடுத்து இளைஞர்களுக்கான கவிதைத் தொகுப்பு நூல் ஒன்றில் 2004 ஆம் ஆண்டு வெளியிட்டது. இந்தப் பதிப்பகத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் ஆப்பிரிக்க அமெரிக்கப் பெண் கவிஞர் என்ற பெருமைக்குரியவர் மாயா ஏஞ்சலோ. 1993 ஆம் ஆண்டு அதிபர் பில் கிளிண்டனின் பதவி ஏற்ப விழாவில் “ஆன் தி பெல்ஸ் ஆஃப் மார்னிங்” (On the Pulse of Morning) என்ற சிறப்பான கவிதையை வாசித்து பலரது பாராட்டுக்களைப் பெற்றார். இந்தக் கௌரவத்தைப் பெற்ற முதல் ஆப்பிரிக்க அமெரிக்கப் பெண் இவர்தான்.*

*ஏஞ்சலோ எழுதிய எத்தனையோ கவிதைகள் அவருக்குக் கறுப்பினப் பெண்களின் விருது பெற்ற கவிஞர் ( Black Woman Poet Laureate) என்ற சிறப்பான கௌரவத்தைக் கொடுத்திருக்கிறது மேலும் அவரது கவிதைகள் ஆப்பிரிக்க அமெரிக்கர்களின் கீதங்கள் எனவும் போற்றப்படுகின்றன. மாயா ஏஞ்சலோ மே 28, 2014 ஆம் ஆண்டு காலமானார். அவர் எழுதிய கவிதைகளிலும், கதைகளிலும் இன்னமும் அவர் வாழ்ந்துகொண்டுதான் இருக்கிறார் மாயா ஏஞ்சலோ.*

# வள்ளுவர் வகுத்த சட்டமும் சட்டத் தொகுப்பும்

**பேரா. மு. முத்துவேலு,**
*தமிழ் பேராசிரியர் மாநிலக்கல்லூரி.*
*உறுப்பினர், மாநிலச் சட்ட ஆட்சிமொழி ஆணையம்,*
*சென்னை.*



*திருக்குறளின் உறுதியும் தெளிவும், பொருளின் ஆழமும், விரிவும் நம்மை வியப்பில் ஆழ்த்துவன. குறளை ஆராயும் ஒவ்வொருவரும் அதனைத் 'தங்கள் துறைசார் நூல்' என்று உரிமை கோருகின்றனர். இதுவே வாழும் வள்ளுவத்தின் தனிச்சிறப்பாகும். அவ்வகையில் திருக்குறளைச் சட்டநெறி நூலாகக் காண்பதுவும் பொருந்தும்.*

***அறமும் திருக்குறளும்:***

*தமிழகத்தை முடியுடைவேந்தர் மூவரும் ஆட்சி செய்துவந்த காலத்தில் அரசர்களுக்கும், அமைச்சர்களுக்கும் 'ஆட்சிமுறைக் கையேடாக'த் திருக்குறள் திகழ்ந்துள்ளது எனலாம். திருக்குறளில் கூறப்பட்டுள்ள அறக்கருத்துக்களே சட்டநெறிகளாகப் பயன்பட்டுள்ளன. திருக்குறளை 'அறம்' என்ற சொல்லால் குறிக்கும் மரபும் பண்டைத் தமிழகத்தில் இருந்தமையைப் புறநானூற்றுப் பாடலின் துணைகொண்டு விளக்குவர்.*

*கொடிய குற்றம் இழைத்தவர்களைப் பட்டியலிடும் புறநானூற்றுப் பாடல் (எண் 34) அதனை 'அறம் பாடிற்று' என்று குறிப்பிடுகின்றது. அப்பாடல், 'செய்நன்றி கொன்றார்க்கு உய்வில்லை' என்பதைக் குறிப்பிடும்போது,*

*"..... .... ..... ஒருவன்*

*செய்தி கொன்றார்க்கு உய்வில்லை என்று*

*அறம் பாடிற்றே ஆயிழை கணவ"*

*என்று சுட்டிக் காட்டுகிறது. இவ்வடிகளில் இடம் பெறும் 'அறம்' என்ற சொல் திருக்குறளைச் சுட்டுவதாகக் கொள்ளும் மரபும் தமிழகத்தில் இருந்து வருகின்றது.*

***அறமும் சட்டமும்:***

*சங்க இலக்கியங்களில், 'சட்டம்' என்ற சொல் இடம் பெறவில்லை. ஆனால், பண்டைத் தமிழ் இலக்கியங்களில், 'சட்டம்' என்ற சொல் இந்நாளில்*

*எக்கருத்துக்களை உள்ளீடாகக் கொண்டுள்ளதோ அக்கருத்துக்களைக் குறிக்கும் வகையில் அறம் என்ற தமிழ்ச் சொல் கையாளப் பெற்றுள்ளது என்பார் மா. சண்முக சுப்பிரமணியம். (சட்டவியல், ப.397)*

*சட்டம் என்பதை, 'அரசின் ஆணை' என்றும் 'அறத்தின் குரல்' என்றும், 'நீதியின் கருவி' என்றும், 'நேர்மையின் இயக்கம்' என்றும் வரையறுப்பர். இவற்றை இணைத்து நோக்குமிடத்து சட்டம் என்பது, அறநெறியை அடிப்படையாகக் கொண்டு அரசின் ஆணையாக அமைந்து, நீதியை நிறுவுவதற்குப் பயன்படும் கருவியாக விளங்குவது என்று தொகுத்துக் கூறலாம். எனவே, சட்டம் உருவாதலுக்கு அடிப்படையாக இருப்பவை அறநெறிகள் என்பதை மறுப்பதற்கில்லை.*

*சங்க இலக்கியங்களில் அறம் என்ற சொல் சட்டத்தைக் குறிப்பதற்கு மட்டும் அல்லாமல் அது நீதியைக் குறிப்பதற்கும் பயன்பட்டு வந்துள்ளது என்பதைக் காண முடிகிறது.*

*இதனை,*

*'"அறந்துஞ்சு செங்கோல்" என்றும், "அறம் புரி செங்கோல்"*

*என்றும் முறையே புறநானூறும் (20) ஐங்குறுநூறும் (290) சங்க இலக்கியச் சான்றுகளாக உறுதி செய்கின்றன.*

*ஆங்கிலத்திலும் 'Law' என்ற சொல் சட்டத்தை மட்டுமல்லாமல் நீதியையும் குறிக்கின்ற முறையைக் காணலாம்.*

*அம்மொழியில் சட்டத்தின் ஆட்சி என்பதை 'Rule of Law' என்றும், நீதிமன்றம் என்பதை 'Court of Law' என்றும் அழைப்பதைக் காணலாம். ஆதலின் தமிழிலும் அறம் என்ற சொல் சட்டம், நீதி (முறைமை) என்ற இரு சொற்கள் உணர்த்தும் பொருள்களைச் சுட்டுவதற்குப் பயன்பட்டு வந்தமை புலப்படக் காணலாம்.*

***சட்டம் - பொருள் விளக்கம்:***

*சட்டம் என்னும் சொல் தமிழில் ஆளப்பெற்ற பின் அதன் பொருள் வரையறுக்கப்பட்டுள்ளது. சட்டம் என்னும் சொல்லுக்கு வீரமா முனிவரின் சதுரகராதி, 'கதவிற்பலகை போல்வன, திட்டம்' என்று பொருள் தருகிறது.*

*ந.சி.கந்தையாப் பிள்ளை தொகுத்த செந்தமிழ் அகராதியில் இச்சொல்லுக்கு, "எழுதும் ஓலை, நியாய ஏற்பாடு, செப்பம், மரச்சட்டம்" என்னும் பொருள்கள் தரப்பட்டுள்ளன.*

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியில் (லெக்ஸிகன்) இச்சொல்லின் பொருளாக, “மரச்சட்டம், கம்பியிழுக்குங்கருவி, நகையில் உம்மச்சு, எழுதும் ஓலை, நியாய ஏற்பாடு, செப்பம், நேர்மை, ஆயத்தம்" முதலியவை தரப்பட்டுள்ளன. இதன்கண் ‘சட்டம்' என்னும் சொல்லுக்கு அகராதிகளில் தொகுக்கப்பட்டுள்ள பல பொருட்களில் ‘செப்பம்’ என்பது சிறப்பாக ஆளப்பட்டுள்ளது தெரியவருகின்றது.



**செப்பமும் நடுவுநிலைமையும்:**

‘செப்பம்’ என்னும் சொல் பழந்தமிழ் இலக்கியங்களில் பல இடங்களிலும் பயின்று வந்துள்ளது. அவற்றுள் சிறுபாணாற்றுப்படை, மலைபடுகடாம், குறுந்தொகை, திருக்குறள், திரிகடுகம் என்பவை குறிப்பிடத்தக்கவை. ‘செப்பம்’ என்னும் சொல்லுக்கு நிகண்டுகள் தரும் பொருளைக் காணின், அச்சொல், 'முறை, விதி, ஒழுங்கு, நியாய ஏற்பாடு, நடுவுநிலைமை' என்னும் பொருள் களைச் சுட்டுவதற்குப் பயன்பட்டமை புலப்படுகிறது.

சூடாமணி நிகண்டு, “செப்பம், நடுநிலைமை, வீதி, மார்பு” என்று பொருளுரைக்கின்றது.

வடமலை நிகண்டு, ‘செப்பம்’ எனும் பெயர் நடுநிலைப் பெயரும் தெருவும், செவ்வையும் நெஞ்சமும் செப்புவார் என்று எடுத்துரைக்கின்றது.

இவற்றை ஒப்பு நோக்கும்போது ‘செப்பம்’ என்பது ‘நடுவுநிலைமை’ என்னும் பொருளை உணர்த்தியமை புலப்படுகின்றது.

**வள்ளுவர் வகுத்த சட்டம்:**

வள்ளுவர் ‘சட்டம்’ என்பதற்கு நடுவுநிலைமை அதிகாரத்தில் விளக்கம் தருகிறார். நடுவுநிலைமை என்பது மனமும் சொல்லும் ஒருபால் கோடாது நிற்கும் நேர்மையைக் குறிப்பதாகும் என்று வரையறுக்கிறார். இதனை,

சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா

உட்கோட்டம் இன்மை பெறின் (குறள்: 119)

என்னஎன்னும் குறளில் விளக்குகிறார். இக்குறளுக்கு உரை வகுப்போர், “நடுவுநிலைமையாவது சொல்லின்கண் கோடுதல் இல்லாததாம்” என்று குறிப்பிடுகின்றனர். எனவே ‘மனமும் சொல்லும் திரியாத நிலையே செப்பம்’ என்பது பெறப்படுகின்றது.

திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்கள், "சொற்கோட்டம் இல்லது செப்பம்" என்னும் தொடரினை மொழிபெயர்த்திருக்கும் முறையும் 'செப்பம்' என்பது நீதியையும், நேர்மையையும் குறிக்கப் பயன்பட்ட சொல் என்பதை நிறுவுகின்றது.

திரு.கே.எம் பாலசுப்பிரமணியம் ‘சொற் கோட்டம் இல்லது செப்பம்’ என்பதை

"The words of impartiality could constitute justice" (ஒருபால் சாயாத சொற்கள் நீதியாக உருவெடுத்து நிற்பன) என்று மொழி பெயர்த்துள்ளார்.

அருள் திரு.ஜி.யூ. போப் இத்தொடரை, “The inflexibility in word is righteousness" (சொற்களில் வளைந்து கொடுக்காத தளர் வின்மையே நேர்மையாகும்) என்று மொழிபெயர்த்துள்ளார்.

இம்மொழிபெயர்ப்புகள் நடுவுநிலைமை என்பதை உணர்த்தும் 'செப்பம்' என்னும் சொல், சீரிய செயலை, நேர்மையான செயலைச் சுட்டிக் காட்டி நீதியையும் சட்டத்தையும் குறிக்கும் சொல்லாக அமைந்திருந்தது என்பதை வெளிப்படுத்துகின்றன.

**கோட்டமும் தீங்கும்:**

‘கோட்டம் இல்லாதது செம்மையானது’ என்பது தெளிவாகிறபோது, ‘கோட்டம் உடையது தீங்கானது’ என்று பொருள் கொள்வதற்கு இடமளிக்கக் காண்கிறோம். மனத்தில் கோட்டத்துடன் வெளிப்படும் சொல்லிலும் கோட்டம் தோன்றும். அத்தகு கோட்டமுடைய சொல்லால் பிறருக்குத் தீங்கு

*விளைவது திண்ணம். இவ்வாறு விளைந்த தீங்கிற்கு இழப்பீடு பெறுவதற்கு வழிவகை செய்யும் சட்டமுறை ஆங்கிலச் சட்டத்தில் உள்ளது. அது 'தீங்கியல் சட்டம்' என்று அழைக்கப்படுகின்றது. இதனை ஆங்கிலத்தில் 'TORTS' என்ற சொல்லால் அழைப்பர். 'TORTS' என்னும் ஆங்கிலச் சொல்லின் மூலத்தை நோக்கும்போது, அது வள்ளுவர் வகுத்த 'சொற்கோட்டம்' என்னும் வரையறைக்குள் வந்தமைவதைக் காணலாம்.*

***சட்டம்: இலத்தீனும் தமிழும்:***

*ஆங்கிலச் சட்டநெறியில் இருக்கும் 'தீங்கியல் சட்டம்' என்பது மிகவும் பழமையான சட்டநெறி ஆகும். இதனைப் பொதுநிலைச் சட்டம், உரிமையியல் சட்டம், எழுதப்படாத சட்டம் (Common Law, Civil Law, Unwritten Law) என்று பல பெயர்களில் அழைப்பர். இது பொதுநிலையில் அமைவதால் இதனைப் பொதுநிலைச் சட்டம் என்பர். ஒருவரது உரிமைக்குத் தீங்கு நேர்கின்றபோது எழுகின்ற சட்டம் என்பதால் இதனைத் தீங்கியல் சட்டம் என்பர். இது எந்தச் சட்டமன்றத்திலும் இயற்றப்படாமல் தொன்றுதொட்டு வழங்கிவரும் தீர்ப்புகளின் அடிப்படையிலேயே மிகுதியும் உருவாக்கப்படுவதால் இதனை எழுதப்படாத சட்டம் என்றும் அழைக்கின்றனர்.*

*'TORT' என்று இச்சொல் ஆங்கிலத்தில் வழங்கும்போது தீங்கு (INJURY) என்ற பொருளை உணர்த்துகிறது. ஆனால், இதன் மூலச்சொல்லான TORTUM என்னும் இலத்தீன் மொழிச்சொல்லில் இதன் பொருள் ''திரிந்தது, வளைந்தது 'கோட்டம் உடையது' (TWISTED) என்னும் பொருள்களை உணர்த்திற்று. எனவேதான், மா. சண்முகசுப்பிரமணியம், "TORT என்பது TORTUM என்ற இலத்தீன் சொல்லில் இருந்து பிரெஞ்சு மொழிக்கு வந்து அதன்பின் ஆங்கில மொழியில் கையாளப்படுகின்றது என்கிறார். அவர் மேலும், நேர்மையற்ற செயலே இச்சொல்லின் இயல்பான பொருள்" என்றும் விளக்குகிறார்.*

*'TORTUM என்னும் இலத்தீன் சொல்லுக்கு வளைந்தது. நேரிய செயலுக்கு மாறானது என்னும் பொருள்கள் கூறப்படுவதால், நேர்மைக்கு மாறாக இருப்பது தீங்கின் அடிப்படை என்பது பெறப்படுகிறது. எனவே அத்தீங்குச் சட்டநெறிக்கு எதிரானது என்பதும், அதனைக் களைவதற்குச் சட்டத்தில் வகைசெய்தல் வேண்டும் என்பதும் ஐரோப்பியரின் கருத்தாக்கங்களின் வெளிப்பாடுகள் ஆகும். இந்த வெளிப்பாடுகளையே வள்ளுவரும் நடுவுநிலைமை அதிகாரத்தில் பதிவு செய்துள்ளார்.*

*தீங்கியலால் விளைந்த தீமைக்கு அல்லது இழப்பிற்கு ஆவன செய்யும் சட்டம் தீங்கியல் சட்டம் எனக் கொண்டால், சொற்கோட்டமாம் தீங்கிற்கு இழப்பீட்டினைப் பெறுதலும் தீங்கியல் சட்டமாகும். எனவே ஆங்கிலச் சட்ட*

நெறிகளுக்கு மூல ஊற்றாக இருக்கின்ற இலத்தீன்மொழிச் சட்டச் சொற்கள் உணர்த்திய சட்டப்பொருளை அதே காலகட்டத்தில் வழங்கிய தமிழ்மொழிச் சொற்களும் வழங்கியுள்ளமையைக் காண்கிறோம்.

**சட்டத்தொகுப்பு – வரையறை:**

பல சட்டக்கூறுகளைத் தொகுத்து ஒரே சட்ட நூலாக அமைக்கும் நடைமுறை ஆங்கிலச் சட்டநெறியில் காணப்படுகின்றது. ஆங்கிலத்தில் இத்தகு சட்டத் தொகுப்பை 'CODE' என்னும் சொல்லால் அழைத்தனர்.

'CODE' என்னும் ஆங்கிலச் சொல்லுக்குப் "பொது மக்களின் அதிகார அமைப்புகள் இயற்றிய சட்டங்களின் பொதுவான திரட்டோ அல்லது தொகுப்போ அல்லது எந்தவொரு பொருட்பாடும் குறித்த சட்டநெறியோ அல்லது சட்டநெறிகளின் முறைப்படியான தொகுப்போ என்று பொருள்" என்றும், இந்தியத் தண்டனைத் தொகுப்புச் சட்டம், உரிமையியல் நெறிமுறைத் தொகுப்புச் சட்டம், குற்றவியல் நெறிமுறைத் தொகுப்புச் சட்டம் முதலியன இதில் அடங்குவன என்று வரையறை செய்வர். *(General Collection or Compilation of laws by Public authorities or a system of law or systamatic body of law on any subject such as Indian Penal Code, Civil Procedure Code, Criminal Procedure Code)*

இதனை மேலும், "ஒன்றோடொன்று வேறுபடுவதையும் ஒன்றின்மேல் ஒன்று சரிந்து நிற்பதையும் தவிர்க்கும் பொருட்டு முறைப்படியாகத் தொகுக்கப்பட்ட இயற்றுச் சட்டங்களின் தொகுப்பு அல்லது சட்டநெறிகளின் தொகுதி' என்றும் வரையறை செய்கின்றனர். *(A systamatic collection of statutes, a body of laws so arranged as to avoid inconsistency and over laping)*

**நூலும் தொகுப்பும்:**

ஒல்காப் புகழுடைய தொல்காப்பியம், தமிழ் மொழியில் அமைந்த ஐந்திலக்கண நூலாகும். இது நூல்களை வகைப்படுத்தும் இடத்து முதல் நூலின் இலக்கணத்தை விளக்கிவிட்டு வழிநூல்கள் தோன்றும் வகையினை எடுத்துக் கூறுகின்றது. அவ்விடத்து,

> தொகுத்தல், விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து
>
> அதர்ப்பட யாத்தலோடு அனை மரபினவே

என்று குறிப்பிடுகின்றது. இந்நூற்பாவில் வரும் 'தொகுத்தல்' என்னும் சொல் மூலநூலாகிய ஒரு நூலில் இருக்கும் கருத்துக் களைத் தொகுத்து உருவாக்கப்படும் வழி நூலைக் குறிப்பதாகக் கொள்வர். இச்சொல், ஒருபொருள்மேல் தொடர்புடைய பல நூல்களில் இருந்து ஒத்த கருத்துக்களைத்

தொகுத்து எழுதப்படும் நூலையும் குறிக்கும் என்று பொருள் கொள்வதற்கும் இடமளிப்பதாகும். எனவே 'தொகுப்பு' என்னும் கருத்தாக்கம் தமிழ் மொழியில் தொன்றுதொட்டு இருந்து வந்தமைக்குத் தொல்காப்பியம் சான்று பகர்வதைக் காண்கிறோம்.

'நூல்' என்பது அறம், பொருள், இன்பம் என்னும் உறுதிப் பொருள்களோடு அனைத்துப் பொருள்கள் மீதும் இயற்றப்பெறும் நூல்களைக் குறிக்கும் சொல்லாகப் பயன்பட்டுள்ளது. இதனை,

நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றும்தன்

உண்மை அறிவே மிகும்

என்னும் குறளால் அறியலாம். இக்குறள், 'நூல்கள் பலபொருளாக அமைவன' என்பதை விளக்குவதைக் காணமுடிகிறது.

நூல் என்பது அறநூல்களை மட்டுமன்றிப் பல்துறைப் பொருட்பாடுகள் குறித்து இயற்றப்பெறும் நூல்களைக் குறிக்கும் என்பதற்கு வள்ளுவம் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. அது 'மருத்துவ நூலுக்கும்' நூல் என்ற சொல்லையே எடுத்தாண்ட தன்மையைக் கொண்டு விளக்கலாம். இதனை,

மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்

வளிமுதலா எண்ணிய மூன்று

என்னும் குறளில் வரும் நூலோர் என்னும் சொல் "மருத்துவநூல் அறிந்தோர்" என்று அமைவதில் இருந்து அறிந்துகொள்ள முடிகிறது.

நூல் என்பது பொதுவாக பல்துறை நூல்களைக் குறித்தாலும் சிறப்பாக அறநூலையே குறித்தது எனலாம். இதனை,

ஒற்றும் உரைசான்ற நூலும் இவைஇரண்டும்

தெற்றென்க மன்னவன் கண்

என்னும் குறளில் வரும் 'நூல்' என்னும் சொல் உணர்த்துகின்றது. உரைசான்ற நூல் என்பது, புகழ் வாய்ந்த நீதி நூலைக் குறிப்பதாகும். மேலும்,

நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்

வென்றி வினையுரைப்பான் பண்பு

என வரும் குறளில், நூலாருள் என்பதற்கு நீதிநூல் அறிந்த அமைச்சர்களுள் என்றும், நூல் வல்லான் என்பதற்கு அத்தகைய நீதி நூல்களுள் வல்லவனாகத்

திகழ்பவன் என்றும் பொருள் காண்பது மரபு. எனவே மன்னர்களிடத்தும் அமைச்சர்களிடத்தும் அரசியல் வினையாற்றுவாரிடத்தும் நூல் என்ற சொல் இயற்றுவதற்கு வழங்கப்படுமாயின், அது அரசுமுறை துணையாக நிற்கும் அறநூலைக் குறிப்பதாகவே கொள்ளுதல் வேண்டும்.



**சட்டமும் தொகுப்பும்:**

ஒரு பொருள் பற்றி அமையும் தமிழ் அறநூலை, ஆங்கிலத்தில் ஒரு பொருள் பற்றி எழுந்த கூட்டத்திற்கு இணையாகக் கூறலாம். பல அறநூல்களின் தொகுப்பை ஆங்கிலத்தில் அமைந்த சட்டத்தொகுப்பிற்கு (Code) இணையாகக் கருதவேண்டும். அவ்வாறு அறக்கருத்துக்கள் பலவற்றையும் தொகுத்துக் காணும் மரபு தமிழகத்தில் இருந்தமைக்கு வள்ளுவம் சான்று பகர்கின்றது. இதனை,

பகுத்துஉண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்

தொகுத்தவற்றுள் எல்லாம் தலை

என்ற குறள் விளக்குகின்றது.

வள்ளுவர் கொல்லாமை என்னும் உயர்ந்த அறத்தை விளக்க முற்படுகின்றார். அப்போது பிற அறநூல்களின் கருத்துக்களை எல்லாம் தொகுத்துள்ளவர்களின் கருத்தினை ஒப்புநோக்குகின்றார். அறநெறிகளை அடுக்கிக் காணும் வள்ளுவர் காலத்தில், அன்றைய சட்டங்களாக இருந்த அறநூல்களுள் ஒத்த கருத்துக்களை ஒப்புமை காணும் பாங்கும் அமைந்திருப்பதை இக்குறள் சுட்டிக் காட்டுகிறது.

‘நூலோர் தொகுத்தவற்றுள்’ என்ற தொடரில் வரும் தொகுத்தவற்றுள் என்னும் சொல், தொல்காப்பியம் குறிப்பிடும் வழிநூல்களின் வழி அமைந்த நூல்களாகக் கொள்வதற்கும் இடமளிக்கின்றது. எனவே தனித்தனியே அறநூல்கள் இருந்தன என்பதும், அத்தகு அறநூல்களைத் தொகுத்துக் காணும் தன்மையும் இருந்து வந்தது என்பதையும் வள்ளுவர் பதிவு செய்துள்ளார்.

**திருக்குறளும் தண்டனைத் தொகுப்புச் சட்டமும்:**

இந்தியாவில் குற்றம் இழைத்தவர்களைத் தண்டிப்பதற்காக ஆங்கிலேயர்களால் 1860இல் உருவாக்கப்பட்டது இந்தியத் தண்டனைத் தொகுப்புச் சட்டம் ஆகும். இச்சட்டத் தொகுப்பில் குற்றங்களை வரையறுத்திருக்கும் தன்மையும், திருக்குறள் குற்றங்களை வரையறுத்திருக்கும் தன்மையும் ஒத்திருக்கக் காணலாம்.

குற்றங்கள் பலவற்றுள்ளும் ‘திருடுதல்’ என்பது தொன்று தொட்டு இருந்துவரும் குற்றமாகும். இக்குற்றச் செயலை இந்தியத் தண்டனைத் தொகுப்புச் சட்டம் (பிரிவு 378) பின்வருமாறு வரையறுக்கின்றது.

*"Theft - Intending to dishonestly any movable property out of possession of any person without that person's consent, moves that property inorder to taking, is said to commit theft"*

இந்த வரையறையில் மூன்று தொடர்கள் இன்றியமையாதவை அவை:

1. *Dishonest*

2. *The property*

3. *Out of Possession* என்பன.

இந்த வரையறையைத் திருவள்ளுவர் ‘கள்ளாமை’ அதிகாரத்தில் வடித்துக் காட்டுகிறார்.

> உள்ளத்தால் உள்ளலும் தீதே; பிறன்பொருளைக்
>
> கள்ளத்தால் கள்வேம் எனல்

என்பது அத்திருக்குறள். இக்குறளில்,

1. கள்ளம் என்பது *Dishonest* என்பதற்கும்,

2. பிறன்பொருள் என்பது *Others Property* என்பதற்கும்,

3. கள்வேம் என்பதற்கு *Out of Possession* என்பதற்கும் பொருந்தி வருவதைக் காணலாம்.

இதைப் போலவே இந்தியத் தண்டனைத் தொகுப்புச் சட்டத்தில் பிரிவு 497 இல் *'Adultry'* என்னும் தலைப்பில் வரையறை செய்யப்பட்டுள்ள குற்றத்தின் தன்மையை வள்ளுவர் 'பிறனில் விழையாமை' என்னும் அதிகாரத்திலும் பிரிவு 499இல் விளக்கப்பட்டுள்ள *Deformation* என்னும் குற்றச் செயலைத் திருக்குறளில் 'புறங்கூறாமை', 'பயனில சொல்லாமை' என்னும் அதிகாரங்களிலும் வரையறை செய்துள்ளார்.

எனவே இன்றைய நாள் நடைமுறையில் இருக்கும் சட்ட நூலின் வரையறையை வள்ளுவரின் குறட்பா எடுத்துக் காட்டியிருப்பது தமிழரின் சட்ட நூற் புலமைக்குச் சான்றாக அமைந்துள்ளது.

**செம்மொழிச் சிறப்பு:**

உலகில் ஒரு சில மொழிகளே செம்மொழிகளாகத் திகழும் பெருமை பெற்றவை. அவற்றுள் இலத்தீனும் தமிழும் குறிப்பிடத்தக்கவை. இலத்தீனும் கிரேக்கமும் உலகத்திற்குச் சட்டநெறிகளைக் கொடையாக வழங்கியவை என்று அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இன்றைய ஆங்கிலச் சட்டநெறியும், உரோமானியர்களிடம் இருந்து தருவித்துக் கொண்டவை ஆகும்.

உலகத்திற்குச் சட்டநெறிகளைக் கொடையாக வழங்கிய இலத்தீன் மொழியில் எழுதப்பட்ட சட்டங்கள் தோன்றுவதற்கு முன்பே இருந்துவந்த 'தீங்கியல்' என்னும் சட்டநெறிக் கருத்தாக்கமும், வள்ளுவர் 'நடுவுநிலைமை' அதிகாரத்தில் தீங்கிற்கு வழங்கிய கருத்தாக்கமும் ஒத்திருக்கும் தன்மை ஈண்டு நிறுவப்பட்டுள்ளது.

உலகில் தொன்மைமிகு நாகரிகம் உடைய எந்த இனத்திற்கும் இணையான நாகரிகச் சிறப்பும் பண்பாட்டுச் செம்மையும். பெற்றுத் திகழ்வது தமிழினம். ஐரோப்பியச் செம்மொழிகளில் சட்டநெறிக் கருத்தாக்கங்கள் வழங்கிய அதே காலகட்டத்தில் தமிழிலும் அந்தக் கருத்தாக்கங்கள் இடம் பெற்றிருந்தன என்பது தெளிவாகிறது.

திருக்குறள் அறநூலாக இருந்து அறம் என்று அழைக்கப்பட்டது; எழுதப்பட்ட சட்டங்கள் உருவாகும் முன்னர் தமிழ்ச் சமுதாயத்தில் இருந்துவந்த அறநெறிக் கருத்துக்களைப் பதிவு செய்துள்ளது; 'சட்டம்' என்பதற்கும் 'தீங்கு' என்பதற்கும் ஐரோப்பியச் செம்மை மொழிகளில் இருந்த கருத்தாக்கங்கள் அவற்றிற்குச் சற்றும் குறைவிலாத நிலையில் தமிழிலும் இருந்தன என்பதற்குத் திருக்குறள் சான்றாக விளங்குகின்றது. ஆங்கிலேயரின் ஆற்றலால் உருவான இந்தியத் தண்டனைத் தொகுப்புச் சட்டத்தின் பல் பிரிவுகளில் குறிப்பிடப்பட்டிருக்கும் செய்திகள் திருக்குறளோடு பொருந்தி வருவதைக் காணும்போது திருக்குறளின் சட்டநெறிகள் சால்பு நன்கு புலனாகிறது.

*தொடர் – 7*

# *எளிய முறையில் யாப்பறிவோம்!*


**நெருப்பலையார் இராம. இளங்கோவன்,**

*பொருளாளர்,*

*பெங்களூரு தமிழ்ச் சங்கம்*




### *பாடம் - 07: நெடிலடி, கழிநெடிலடி*

*இதற்கு முன்பு பாவலர்களே!... நாம் அடி என்ற பாடத்தைப் படித்து அளவடி வரை கற்றுணர்ந்தோம். இல்லையா? இனி இதே அடியெனும் பாடமான அடியொட்டிய பாடத்தில் அளவடியைத் தொடர்ந்து நெடிலடியைத் தொடர்ந்து பின் வரும் எல்லாவற்றையும் பற்றி அறிவோமா? வாருங்கள். மூச்சுப் பயிற்சியை மிகச் சிந்தையுடன் செய்வது போல் யாப்பிலக்கணப் பாடத்தைக் கற்று உணர்ந்து பயிற்சி எடுத்தால் சிறந்த மரபுப் பாவலர் நீங்கள் தாம். இதனால், பயிற்சியில் முழு சிந்தனையைச் செலுத்தி வாருங்கள். இனி பாடத்திற்குள் நுழைவோம்.*

### *நெடிலடி:*

*இந்த நெடிலடியை ஒரு பாட்டுடன் தொடங்கி அறிய முயல்வோம். என்ன என் கண்ணோட்டம் சரி தானே! அதனால் இதோ ஒரு பாடல்..........*

*"இயற்கை இயல்புடன் இன்தமி ழென்றும் இணைந்ததுவே;*

*செயற்கை மொழிகளால் செந்தமிழ்த் தாழ்ந்தே சிதைவதுவோ?*

*இயற்கையும் இன்பத் தமிழு(ம்) உலகின் இதயமாகும்;*

*புயலாய் எழுந்துமே பைந்தமிழ்க் காத்துநாம் போற்றுவமே!"*

*(நெருப்பலையார்)*

*என்ற மேற்காணும் தமிழுணர்வு அடிப்படையில் நான் எழுதிய ஐந்து சீர்கள் கொண்ட நெடிலடியான கட்டளைக் கலித்துறைப் பாடலாகும். அதற்கு முன் ஐந்து சீர்கள் கொண்ட வேறு பாவகை உண்டா? என்ற ஐயம் உங்களுக்கு வரலாம். வர வேண்டும். உங்களுக்கு ஐயம் வந்தால் தான், அயல்நாட்டு அறிஞர் கூறியது போல அதிகமாக வினாத் தொடுத்தால் தான் அதிகமாகத் தெளிவு பிறக்கும். அதனால், நீங்களும் நிறைய வினாத் தொடுத்து அதிக விளக்கங்கள் அறிய முயலுங்கள். அப்பொழுது தான் சரியாகக் கற்க இயலும்.*

*அதனால் விளக்குவதெனில், நெடிலடி என்றாலே ஐந்து சீர்கள் கொண்ட பாடலென்றால் அது கட்டளைக் கலித்துறைப் பாடல் தான். என்றாலும், இப்பாடல் தவிர்த்து வேறு பாடல்கள் உண்டா என்று அறிய முயலலாம் என்றாலும் கீழே வரும் இரண்டு பாக்கள் நமக்குத் தெளிவு படுத்துவதைக் கற்றுணர்வோம்!*

*நான்கு சீர்களுக்குட் பட்டு வருவதெல்லாம் குறளடி; சிந்தடி; அளவடி எல்லாம் எல்லாப் பா வகைகளிலும் வரும். ஆறு சீர்கள் முதற் கொண்டு வரும் பாடல்கள் எல்லாம் ஆசிரிய (விருத்தம்) மண்டிலங்களில் வரும். ஆனால், ஐந்து சீர்கள் கொண்ட பாடல் எதுவென்றால் அது கட்டளைக் கலித்துறை மட்டுமே! அப்பாடலை இப்பொழுது கண்டோம்.அதை ஒட்டிய விளக்கப் பாடல் இரண்டை கீழே காண்போம். அவை இதோ.........*

*"ஐஞ்சீர் நான்கடி கலித்துறை யாகும்."*

*என்று அவிநயனார் என்ற புலவர் சுட்டி இருப்பதை நினைவில் கொள்ளுங்கள். அடுத்து........*

*"ஐஞ்சீர் முடிவின் அடித்தொகை நான்மையொ(டு)*

*எஞ்சா மொழிந்தன எல்லாம் கலித்துறை."*

*என்று காக்கைபாடினியார் வலியுறுத்துகிறார் என்பதையும் உணருங்கள். பின் வரும் பாடங்களில் விரிவாகக் காண்போம். இப் பாடத்தில் அடி பற்றியே பயணிப்போம். ஐந்து சீர்கள் கொண்ட நெடிலடியின் கட்டளைக் கலித்துறை பார்த்தோம். அடுத்து..........*

***கழிநெடிலடி:***

*பாட்டில் ஐந்து சீரைக் கடந்து*
*அறுசீர் அடி,*
*எழுசீர் அடி,*
*எண்சீர் அடி,*
*பதின் (பத்து) சீர் அடி,*
*பன்னிரு சீர் அடி,*
*பதினான்கு சீர் அடி,*
*பதினாறு சீர் அடி,*
*முப்பத்து இரண்டு சீர் அடி*

*எனத் தொடரும் பாக்களுக்குச் சுருக்கமாக கழிநெடிலடி என்று பெயர் வைக்கப் பட்டுள்ளது. இந்தக் கழிநெடிலடி என்பது ஆசிரிய மண்டிலத்திற்குரியதாகும்;*

*இனி இந்த எல்லாக் கழிநெடிலடிக்கும் ஒரு பாடல் என்ற வகையில் எடுத்துக் காட்டாக வழங்குவேன். அதைப் புரிந்து படித்து நீங்களும் தனித்துவமாகப் பாடல் எழுதிப் பழகுங்கள்.*

***அறு சீர் கழிநெடிலடி:( மண்டிலம்- விருத்தம்)***

*அறு சீர் கழிநெடிலடி ஆசிரிய மண்டிலம் பாடல் காண்க:*

*உயிரைக் கொடுத்து என்னில்*

*உயிராய் உலவு கின்றாய்;*

*பயிராய் விளைய நீராய்ப்*

*பருக நீயே ஆனாய்;*

*வயிறை வளர்ப்போ ரிடையே*

*வளமாய்த் தமிழே தாயே*

*உயிரைக் கொடுத்தும் நானும்*

*உன்னைக் காப்பேன் வாழி!*

*(நெருப்பலையார்)*



*என்ற இப்பாடல் அறுசீரில் ஈரசைச் சீர்களாக மாச்சீர்களைக் கொண்டு எழுதியுள்ளேன். மூன்று சீர் அரையடியாகவும் அடுத்த அரையடி மூன்று சீர்களாகவும் இரண்டாம் அரையடி உள்ளே தள்ளி மடக்கி எழுதி இருப்பதையும் உற்று நோக்குங்கள். இந்த அறுசீர் கழிநெடிலடி என்னும் மண்டிலத்தில் பல பாவகை உண்டு.*

*அரையடி தோறும்... ...*

*ஒரு காய் - இரண்டு மாச்சீர்கள்.*

*ஒரு காய்- ஒரு மாச்சீர்- ஒரு தேமா சீர்.*

*மூன்று காய்.*

*இரண்டு காய்- ஒரு மாச்சீர்.*

*இரண்டு மாச்சீர் - ஒரு காய்.*

*மூன்று ஈரசைச் சீர்.*

*இப்படிப் பல. இவை யாவும் அரையடிக்கான சீர் கணக்காகும் என்பதை நினைவில் கொள்க. இப்படிப் பாவகை நிறைய உண்டு. தாங்கள் மாற்றி மாற்றி எழுதிப் பழகுங்கள். ஐயம் இருந்தால் வினவுங்கள் விளக்கம் தருவேன். அடுத்து எழுசீரில் ஒரு கழிநெடிலடி என்ற மண்டிலம் சார்ந்த பாவினைப் பார்ப்போம்.*

***எழுசீர் கழிநெடிலடி ( மண்டிலம்) பாடல்:***

*இரும்பைப் போல இறுகி இருப்பினும்*

*இளகும் நெஞ்சம் எனக்குண்டு;*

*அருகி நீரும் அற்றுப் போயினும்*

*அருந்திடும் நீராய் நானிருப்பேன்;*

*உருவம் பெரிதாய் எனக்கி ருந்துமே*

*உருகிடும் இதயம் எனக்குண்டு;*

*மருவி நானும் பணிந்த போதுமே*

*மாந்தரே ஏன்தான் நடுங்குகிறீர்?*

*(நெருப்பலையார்)*

*என்ற இப்பாடலை எழுசீரில் அமைத்துள்ளேன். (மா+மா+மா+விளம்+ மா+ மா+ காய் எனக் கொண்ட) இந்த எழுசீர் கழிநெடிலடி (ஆசிரிய) மண்டிலத்தில் ஆறு ஈரசைச் சீர்களும் ஒரு காய்ச் சீரும் இணைந்த எழுசீர் அடியாகும். இப்பாடல் கூட நான்கு சீர் ஒரு வரியாகவும் மூன்று சீர் ஒரு வரியாகவும் அமைந்திருப்பதை நோக்குங்கள். இதே எழுசீரில் கூட சீர்களை முழுக்க ஈரசைச் சீர்களாகவும், காய்ச் சீர்களாகவும் எப்படி வேண்டுமானாலும் சீர்களைக் கையாளலாம் என்று புரிந்து கொள்ளுங்கள். மேலும் பா முழுவதும் உள்ள எழு சீர்களையும் மாச் சீர்களாகவும், இதேபோல் எழுசீர்களை விளச்சீர்களாகவும் எழுதலாம் என்பதையும் உணருங்கள்.*

*அடுத்து எண்சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் என்ற மண்டிலப் பாடல் ஒன்று எடுத்துக் காட்டாகக் காண்போம்.*

***எண்சீர் கழிநெடிலடி ஆசிரிய (விருத்தம்) மண்டிலம்:***

*தமிழினத்தின் அடையாள மாக நிற்கும்*

*தனித்துவமாய்த் திருக்குறளைத் தமதாய் மாற்றித்*

*தமிழினத்தின் சான்றதனை மாற்றி வெற்றித்*

*தாமேற்க நினைக்கின்ற கீழ்மை மாற்றி*

*அமிழ்தான முப்பாலாம் குறளே வெல்லும்;*

*அகிலத்தில் வானுயர தழைத்தே நிற்கும்;*

*தமிழினமே வீறுகொண்டு இழிவு செய்யும்*

*தாழ்மனத்தை வேரறுத்துக் குறளே வாழும்!*

*(நெருப்பலையார்)*

*என்ற என்னுடைய இந்தப் பாடலில் அரையடியில் இரண்டு காய்ச்சீரும், ஒரு புளிமாச்சீரும், ஒரு தேமாச் சீரும், மீதி அரையடியில் இதேபோல் இரண்டு காய்ச் சீரும், ஒரு புளிமாச் சீரும், ஒரு தேமாச் சீரும் வந்திருப்பதை உற்று நோக்குங்கள். இது மட்டுமில்லை இந்த எண்சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் என்னும் மண்டிலத்தில் நான் அறிந்த வகையில் பல்வேறு பாவகை உண்டு. அத்துணையையும் இங்கே சுட்டிக் காட்ட இயலாது; தனி நூலாகி விடும். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்த்தல் போதுமல்லவா? என்ன பாவலர்களே! போதாதா? போதாதென்றால் என்னைத் தொடர்பு கொள்ளுங்கள். அடுத்து........*



***பதின்(பத்து) சீர் கழிநெடிலடி ஆசிரிய மண்டிலம்:***

*இனி வரும் பாடல் எடுத்துக் காட்டாக ஒரு அடியை மட்டும் சுட்டிக் காட்டி வருகிறேன். முழுப் பாடலும் தேவை இல்லை இல்லையா? ஏனெனில் முழுப் பாடலென்றால் நீளும். அடிக்கு எத்தனை சீர் என்பதை அறிய ஒரு அடியே போதுமானதாகும். ஆகவே, இதோ பதின் சீர் கழிநெடிலடி ஆசிரிய மண்டிலம்.........*

***பாடல் :***

*"கொங்கு தங்கு கோதை ஓதி மாத ரோடு*

*கூடி நீடு ஓடை நெற்றி."*

*இது பதின் சீர் கொண்ட பாடலாகும். பதின் என்றால் பத்து என்று பொருளாகும். ஆக, இது பத்து சீர் கழிநெடிலடி ஆசிரிய மண்டிலமாகும். அடுத்து......*

***பன்னிரு சீர் கழிநெடிலடி ஆசிரிய மண்டிலம்:***

*இப்பாடல் கூட முழுப்பாடல் அல்ல. ஒரு அடியை மட்டும் எடுத்துக் காட்டாக வழங்குகிறேன்.*

*"எங்கும் நிறைந்தாயே! எங்கெங்கும் ஒளிர்ந்து*

*எதிலும் உறைந்தாயே!*

*பொங்கும் தமிழாக புதுமையாக நிறைந்தாய்*

*எழிலான என்தமிழே!"*

*மேலே உள்ள பன்னிரு சீரடியை உற்றுப் பாருங்கள் பாவலர்களே! பன்னிரு சீரடி முடியும் வரை முதல் வரியில் நான்கு சீரும், இரண்டாம் வரியில் இரண்டு சீரும் இதேபோல் கீழுள்ள இரண்டு வரிகளும் அதேபோல் வந்துள்ளன. ஆனால், அந்த அடி முடியும் வரை ஒவ்வொரு வரியும் உள்ளே தள்ளித் தள்ளி மடக்கி மடக்கி வந்திருப்பதை நோக்குங்கள். இப்படி எழுதுவதின் அடிப்படை என்ன? அந்த அடியின் தொடர்ச்சி என்பதைச் சுட்டிக் காட்டவே இப்படி எழுத வேண்டும் என்று உணருங்கள். ஒவ்வொன்றுக்கும் அழுத்தமாக திரும்பத் திரும்பச் சுட்டுவது உங்களுக்கு ஐயம் ஏற்படாமல் இருக்கவே! இவ்வளவு தெளிவாக யாப்பிலக்கண நூல்களில் கூட நீங்கள் கண்டறிய இயலாது என்பதை உணருங்கள். அடுத்து........*

***பதினான்கு சீர் அடி:***

*(இதற்கும் எடுத்துக் காட்டாக ஒரு அடி மட்டுமே)*

*இதோ பாடல்:*
*"குருவிலா வித்தைகூர் அறிவிலா வாணிகம்*

*குணமிலா மனைவி ஆசை*

*குடிநலம் இலாநாடு நீதியில் லாஅரசு*

*குஞ்சரம்இ லாத வெம்போர்."*

என்று இப்பாடலும் பதினான்கு சீர் முடியும் வரை அந்த அடிக்கான சீர்கள் என்றளவிலேயே நான்கு வரிகளிலும் உள்ளே தள்ளித் தள்ளி மடக்கி மடக்கி வந்திருப்பதைக் காணுங்கள். கண்டு உணர்ந்து பயின்று எழுதிப் பயிற்சி எடுங்கள்.



அடுத்து, பதினாறு சீர் அடி பாட்டும், முப்பத்து இரண்டு அடி பாட்டும் எழுத வேண்டாமே! முன்னால் எடுத்துக் காட்டாக அமைந்துள்ள பாடல்கள் போன்றே சீர்களை அதிகப்படுத்தி எழுதுதல் என்பது தாங்கள் அறிந்த ஒன்றே! ஆகவே, எடுத்துக் காட்டாக பாட்டுகள் தேவையில்லை எனக் கருதுகிறேன். ஆனால், நீண்ட கழிநெடிலடி பாடல் அறிய வேண்டுமெனில், குமரகுருபரர் எழுதிய " மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் "சிகர வடவரை" என்ற பாடலைக் காணுங்கள். முப்பத்து இரண்டு சீர்கள் கொண்ட பாவினைப் படைத்துள்ளார்.

இதேபோல், வள்ளலார் இராமலிங்க அடிகள், " திருவடிப் புகழ்ச்சி" என்கிற பாட்டினை நூற்றித் தொண்ணூற்று இரண்டு சீர்களில் பாடி இருக்கிறார். அந்நூல்களில் காணுங்கள். காண்பதற்கு இப்பாடல்கள் உரைநடை போல தோற்றமளிக்கும் என்பதையும் உணருங்கள். பன்னிரு சீர், பதினான்கு சீர், பதினாறு சீர் ஆகிய கழிநெடிலடி மண்டிலங்களை இரட்டை மண்டிலங்கள் என்று அழைப்பதுமுண்டு என்பதையும் நினைவில் கொள்ளுங்கள்.

# தமிழ் இலக்கியங்கள் கூறும் வாழ்வியல் சிந்தனைகள்- 12

## (செஞ்சடை இறைவன் பாதம் நெஞ்சிடை வைத்த வாலி)



**மு. பழநிச்சாமி**
*நாகமலை, மதுரை-19*
*மின்னஞ்சல் : vmps834@gmail.com*

தென்தமிழ் நாட்டுத் தொன்முது கடவுளாகிய சிவபெருமானைத் தன் வழிபடு கடவுளாக வகுத்துக் கொண்டவன் வாலி. கிட்கிந்தையை ஆண்ட கோமகன் அவன். வெண்ணிற மேனியும் வாலில் திண்ணிய வலியும் உடையவன்.

ஏழாம் நூற்றாண்டின் எழு ஞாயிறான ஞானசம்பந்தப் பெருமான் தான் இவ் வாலியயைத் தமிழகத்திற்கு முதன்முதலாக அறிமுகப்படுத்துகிறார். பின்னர் கம்பரின் இராம காதை, உத்தர காண்டம், காஞ்சிப்புராணம் முதலிய நூல்களில், இவனது சிவ பக்தியும், அடலாண்மையும், வீரமும் வென்றியும் பரக்கப் பேசப்படுகின்றன.

வாலி சுக்ரீவர்க்கிடையே விளைந்த மாறுபாடு; இராமன் மறைந்திருந்து அம்பெய்து வாலியைக் கொன்றது; அவர்கள் இருவருக்கும் இடையில் நிகழ்ந்த வாதப் பிரதிவாதம் முதலியவற்றை விலக்கி, வாலி பரமனிடம் பூண்டிருந்த பக்தியின் நீர்மை; அதற்குத் துணை நிற்கும் அவனது தோளாற்றல்; வாலின் வலி; ஆகியவற்றை மட்டும் இங்குச் சிந்திக்கலாம்.

வாலி ஓர் அழுத்தமான சிவநேசச் செல்வன் என்பது பற்றிய செய்திகள், பக்தி இலக்கியங்கள் மற்றும் கம்பன் காதையில், பரவலாகப் பேசப்பட்டு உள்ளன. அவற்றுள் வாலிபற்றி சம்பந்தப் பெருமான் சொன்ன செய்திகள், கம்பன் காதையில் அனுமன் வாயிலாக அறியப்படும் செய்திகள், இராமன் வாயிலாக வரும் குறிப்புகள், அங்கதன் மூலம் அறியப்படும் வாய் மொழிகள், உத்தரகாண்டக் குறிப்புகள் ஆகியவைகளைச் சேர்த்து வைத்துச் சிந்தித்து நிரல் படுத்திப் பார்ப்பது என்பது, வாலியை முழுமையாகப் பார்ப்பதற்கு நிகராகும்.

வட குரங்காடுதுறை என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனைப் பரவும் பதிகத்தில், வாலியைப் போற்றி எடுத்துப் பாராட்டி இன்புறுகிறார் சம்பந்தர்.

"கோலமா மலரொடு தூபமும் சாந்தமும் கொண்டு போற்றி வாலியார் வழிபடப் பொருந்தினார்" என்பது தொடர்புடைய பாடல் வரிகள் ஆகும். இத்தலத்து இறைவனைச் சாந்தமும் நீரும் கொண்டு ஆட்டி, அன்றலர்ந்த மலரிட்டு, தூப தீபம் காட்டி வழிபட்டு வரும் வழக்கத்தைப் புனிதமான

பழக்கமாகக் கொண்டவன் வாலி என்பது, இப்பாடல் வரிகளால் பெறப்படும் செய்தியாகும். இதன் மூலம் வாலி, பரமசிவனைப் பரசி வந்த பரம பக்தன் என்பதைப் பதிவு செய்கிறார் சம்பந்தர் என்பது ஒன்று. இரண்டாவதாக இவன் சிறந்த சிவபக்தன் மட்டுமன்று; வரம்பிலாற்றலுடைய வீரன் என்பதையும் விளக்கி யருள்கிறார்.

"நீலமா மணி நிறத்து அரக்கனை யிருபதுகரத்தொடு ஒல்க வாலினாற் கட்டிய வாலியார்" என்பது சம்பந்தரின் சொற்கட்டு.

தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை எனத் தருக்கித் திரிந்தவன் இராவணன். இறைவன் வீற்றிருக்கும் மலை என்றும் எண்ணாமல், வெள்ளியங்கிரியை ஊசி வேரோடும் பெயர்த்து வீச முயன்றவன் அவன். அத்தகைய இராவணனைத் தன் வாலினால் கட்டிப்பிடித்துக் கதிகலங்க வைத்தவன் வாலி என்று பேசிக் காட்டுகிறார் சம்பந்தர்.

இங்கு நாம் ஒன்றைச் சிந்திக்க வேண்டும். மேற்கண்ட பாடல் வரிகளில் 'வாலி' என்னாமல் 'வாலியார்' என மரியாதைப் பன்மையில் கூறி இருத்தலால், வாலி என்னும் சிவனடியார் மீது, சம்பந்தர் கொண்டுள்ள அன்பும் பக்தியும் எத்தகையது என்பதை உய்த்துணரலாம். ஆனால் சம்பந்தரோ பிற திருமுறை ஆசிரியர்களோ இராவணனை 'இராவணனார்' என்று உயர்வு சிறப்பு நல்கிப் பாடவில்லை என்பதும் இங்கு சிந்திக்கத்தகும்.

இவ்வாறு சம்பந்தப் பெருமானால் சிவபக்தன் என்றும், சிறந்த வெற்றி வீரன் என்றும், தமிழர்களுக்கு அடியெடுத்துக் கொடுத்து அறிமுகப்படுத்தப்பட்ட வாலியின் வரலாறு, கம்பனில் கால்கொள்வதையும், உத்தரகாண்டத்தில் விரிவுபடுவதையும் ஒன்று படுத்திப் பார்க்கலாம்.



இந்திரன் மகனான வாலி, கலை பல கற்றுத் தேர்ந்தவன். ஆண்மை, அஞ்சாமை, மானம், வீரம், ஈகை முதலிய மேலான நிலைகளில் மேலோங்கித் திகழ்ந்தவன். சிந்தனையாலும் செய்கையாலும் யாருக்கும் தீவினை புரியாத செம்மல். சிவபெருமானைச் சிந்தையில் தேக்கி நிறுத்தி வழிபட்டுச் சித்திகள் பல பெற்ற வித்தகன். எதிர்த்தவர் எவராயினும் அவரது வலிமைகளில் பாதி, தன் பால் வந்து சேர வரபலம் பெற்றவன். கிட்கிந்தையில் வேந்தர் வேந்தனாய் விளங்கித் திகழ்கிறான். அவனை வெல்ல வல்லவர் மூவுலகிலும் யாரும் இல்லை என்று, நாரதர் மூலம் அறிந்தான் இராவணன்.

*திசைகள் தோறும் சென்று திக்குவிசயம் செய்து, அனைவரையும் அடிப்படுத்தி வெற்றி வீரனாய் விளங்கி நின்றவன் இராவணன். இந்த வெற்றிக் களிப்பினால் யாரும் தனக்கு நிகர் இல்லை எனும் அகந்தை கொண்டு செருக்குற்றிருந்த அவனுக்கு வாலிபற்றி அறிந்ததிலிருந்து இருப்புக் கொள்ளவில்லை. பகை கொண்ட நெஞ்சும், படை கொண்ட வாளும், சினம் கொண்டு சிவந்த கண்ணுமாய் கிடக்கிந்தை சென்று, வாலியின் அரண்மனை புகுந்தான்.*

*வாளோடும் வீரத்திறலோடும் வந்து நின்ற அவனைக் கண்டதும், வாலியின் மனைவி தாரை, நீர் யார்? வந்த காரியம் யாது? என வினவ, வாலியோடு வாட்போர் புரிய வந்துள்ளேன். வரச்சொல் வாலியை எனச் சொன்னான். இது கேட்ட தாரை, எமனின் வாய்க்குள் நுழையத் தானாகத் தேடி வலிய வந்துள்ளாய்; சரி இருக்கட்டும்; அவர் இப்பொழுது இங்கு இல்லை. சிவ பூசை செய்யப் போயுள்ளார். நான்கு திசைகளிலும் உள்ள கடல்களில் நீராடிப் பூசை முடித்து வர நேரமாகும். அவசரமாயின் தென் திசை நோக்கிச் சென்று பார் எனச் சொல்லி விடுத்தாள்.*

*'வாலி தன்னொடும் வாளமர் செய்திடக்*
*கோலி வந்தனன்'- என்றவன் கூறிடக்*
*காலனோடு கனன்று பிழைக்கவோ?'*

*சால நன்றெனத் தாரை இயம்புவாள் :*
*'ஆதலால் அடல் வாலியோடும் போரின்*
*சாதல் திண்ணம் நீ சாகரம் நான்கிலும்*
*தீதிலாச் சிவபூசனை செய்திடப் பாய்தல் செய்யும் பதறலை'- என்றாள்.*

*'தரிக்கிலாய் எனின் தென் திசைச் சாகரத்து*
*அரக்க ஏகுதியால் எனத் தாரையீது*
*உரைக்க ஏகி உயர் சிவ பூசையில்*
*இருக்கும் வாலியை எய்தினன் நோக்கினான்' (உத்தர காண்டம்)*

*மேற் சொன்ன செய்திகளில் சில அடங்கிய பாடல்கள் இவை. இது கேட்ட இராவணன் விரைந்தெழுந்து விமானம் ஊர்ந்து தென்கடல் அடைந்தான். சின்னஞ்சிறிய வெள்ளியங்குன்றொன்று, ஆடாமல் அசையாமல் வீற்றிருந்தது போல, சிவபெருமானைச் சிந்தித்துக் கண்மூடிக் கருத்தொருமித்து பத்தி நிலையில் படிந்து பூசனை புரிந்து கொண்டிருந்த வாலியைக் கண்டான். கண்ட இராவணன் மறைந்து பின்புறமாய் ஒதுங்கி வந்தான். கீழே நீண்டு கிடந்த நெடிய வாலைப்பற்றிப் பிடித்து இழுத்து கொன்றுவிடலாம் என எண்ணினான். எண்ணியபடியே வாலைப் பிடித்து இழுக்கவும் வால் அவனைப் பிடித்துக்கொண்டது. வால் வேண்டாம் என்று கையை உதறிப் பார்த்தான். ஆனால் வால் அவனை விடுவதாக இல்லை. அது சுற்றி வளைத்துப் பற்றிப்*

பிடித்து அவனது இருபது தோள்களையும், பத்துத் தலைகளையும் வரிந்து பிணித்துக் கொண்டது. இராவணன் வாலியின் வாலில் கட்டுண்டு செயலற்ற நிலையில் அடல் ஒடுங்கி அடங்கிக் கிடந்தான். பூசை முடிந்து எழுந்தான் வாலி. தன் வாலில் பிடியுண்டிருந்ததைச் சற்றும் கண்டு கொள்ளாமல், சிவ சிந்தனையோடு வடகடல் பாய்ந்தான். அங்குப் பூசனை முடித்துத் தாவி எழுந்து கீழ்கடலும் மேல்கடலும் போய்ப் பூசை முடித்துத்தன் வளமனை புகுந்தான். வந்து புகுந்த வாலியைக் கண்டு மகிழ்ந்த அவன் மனைவி தாரை, வாலில் பிடியுண்டிருக்கும் இராவணனின் துன்பம் கண்டு இரங்கி அவனை விடுவிக்க வேண்டினாள். வாலியும் தன் வாலிலிருந்து மெல்லக் கட்டவிழ்த்து விட்டான். உத்தரகாண்டம் சொல்லும் செய்திகள் இவை. இனி இராமகதை சொல்லும் செய்திக்கு வருவோம்.



இராவணன் திக்கெட்டும் சென்று, அனைவரையும் வென்று, எங்கும் தன் ஆணை செலுத்தி வந்தவன். அந்த அளப்பரிய ஆற்றலைக் குறிக்கும் அவனுடைய கோல் வாலியின் வால் எதிரே வர அஞ்சி அகன்று ஒதுங்கிப் போகும் என்பதை, அனுமன் இராமனுக்கு எடுத்தியம்பும் முறையில், "வாலி வால் செலாத வாய் அலது இராவணன் கோல்செலாது" எனக் கம்பன் காட்டுகிறான். வாலியின் 'வால்' செல்லுமிடத்து இராவணனின் 'கோல்' செல்லாது என்பது மேற்கண்ட பாடல் வரிகள் நமக்குச் சொல்லும் செய்தியாகும். ‘செலாத வாய் அலது' என்பதற்கு 'செல்லும் இடத்து' என்பது பொருள். கோல் என்பது செங்கோல். இங்கு அதிகார ஆணை செலுத்தும் கட்டுப்பாட்டு எல்லைக்கோட்டைக் குறித்து நின்றது.

வாலியின் வாலை நினைக்கும் பொழுதெல்லாம் இராவணனின் நெஞ்சம் திகிலடைந்து பயம் கொண்டு பதைபதைத்துப் பறையடிக்கும் என்பதை "உன்றன் நிறையடிக் கோல வாலின் நிலைமையை உன்னும்தோறும் பறையடிக்கின்ற அந்தப் பயம்" எனப் பேசுகிறான் அங்கதன்.

தூதாகச் செல்லும் அங்கதன் வாயிலாக "இந்திரன் செம்மல் பண்டு ஓர் இராவணன் என்கின்றானைச் சுந்தரத் தோள்களோடும் வாலிடைத் தூங்கச் சுற்றிச் சிந்துரக் கிரிகள் தாவித் திரிந்தனன்" என்று பேசி, வாலியின் வாலில் கட்டுண்டு இராவணன் பட்ட பாட்டை, அனுபவித்து அல்லலை, கூசிக் குறுகி

*நாணி நின்ற நிலையை, நம் உணர்வுச் செவிக்குள் கொண்டு வந்து செலுத்துகிறான் கம்பன்.*

*வாலியின் வாலாற்றலின் பெருமிதத்தைப் பேசிச் சம்பந்தர் அடியெடுத்துதவ, கம்பன் வாலியின் வாலுக்கு மெருகேற்ற, உத்தரகாண்டம் உவந்து பேச, இவ்வாறு வாலியின் வால் இலக்கியவானிலும், பக்தி உலகிலும் பரிணாம வளர்ச்சி பெற்றுப் பொலிகிறது.*

*இவ்வாறு வாலியின் வாலாற்றலை அனைவரும் பெருமைப்படுத்திப் பேச வேண்டியதன் அவசியம் என்ன? அது வலிமை பெற்ற வால் என்பதால் மட்டுமா? அல்லது அதற்கு மேலும் தகுந்த காரணம் ஏதேனும் உண்டா? உண்டு என்றால் என்ன காரணம்? சிந்திக்க வேண்டும். சிவ பூசை செய்பவருக்கு இடையூறு செய்பவர் எவ்வளவு பெரிய வலியராயினும் அவரை அடக்கி ஒடுக்கி அஞ்சி அகன்று போகச் செய்யும் ஆற்றல் அந்த வாலுக்கு உள்ளதால் தான்.*

*இனி வாலி, வாலியின் வால், இராவணன், என மூன்று கூறுகளாகி நின்று தம்முள் செயல்பட்ட பாங்கின் மூலம் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய செய்தி ஏதேனும் உண்டா? அல்லது இந்த செயல்பாடுகள் நமக்குத் தெரிவிக்கும் உண்மை என்ன? இப்படியும் சிந்திக்கலாம் அல்லவா. சித்தத்தைச் சிவன் பாலே வைத்து, இருந்த இடத்திலிருந்து பூசிப்பவன் வாலி. இவ்வாறு சிவ பூசையில் இருக்கும் அவனுக்கு யார் மீதும் காழ்ப்பில்லை; கசப்பில்லை; பகை இல்லை. மாறாகச் சீலமும் நோன்பும் துலங்கச் சாத்விக நிலையில் தெய்வத்தோடு கலந்து தியானிக்கும் நிலை. மாறாக இராவணனின் நிலை என்ன?*

*இருந்த இடத்தில் இருந்து பூசிப்பவன் வாலி;*

*தேடிப் போருக்கு வருபவன் இராவணன்;*

*சாத்வீக நிலைபடிந்த சிவ சிந்தனையில் இருப்பவன் இவன்.*

*செருக்கிச் சினந்து தருக்கி வருபவன் அவன். அஞ்செழுத்தை நெஞ்சழுத்தி நிற்பவன் இவன்; வஞ்சத்தை நெஞ்சத்தில் தேக்கி நிறைத்து வருபவன் அவன்.*

*இவ்வாறு எதிரெதிராய் அமையும் இந்த இரு வேறு நிலைகளுக்கிடையில், வாலின் நிலைப்பாடு என்ன?*

*பக்தியோடு பொருத வந்த பகையைக் கட்டிப்போட்டது அந்த வால்.*

*சாத்வீகத்தோடு மோத வந்த செருக்கை வேரறுத்தது அந்த வால்.*

*சிவ பூசைக்கு இடையூறாகச் சீறி எழுந்து வந்த சீற்றத்தைச் சுட்டெரித்தது அந்த வால்.*

பகையின் தாக்கம் பக்தி பண்ணுவோனைப் பாதிக்காத படி பாதுகாத்து நின்றது அந்த வால்.

இங்கு பக்தி நிலை பூண்ட வாலி என்பது நன்மை.

பகையுற்று வந்த இராவணன் என்பது தீமை.

தீமையை அழிக்கத் துணை நின்ற வால் என்பது அறம்.

நன்மைக்கு எதிர்பட வரும் தீமையை வேரறுக்கத் துணையாக அறம் அமைந்து நிற்கும் என்பது, மேற்கண்ட செய்திகள் நமக்குத் தெரிவிக்கும் உண்மைப் பொருளாகும்.



இனி இத்தகைய ஆற்றல் படைத்த அவன் சிவபெருமானை வழிபட்ட வகை தொகைகளைக் காணலாம்.

சிவமாம் அருட்பெரு வெள்ளத்தில் திளைத்தாடி, அப்பரம்பொருளின் அருளால் வரம்பபில்லாத ஆற்றல் பெற்றவன் வாலி என்பதை, "சூலிதன் அருள் துறையில் முற்றினான்; வாலி என்றுளான்; வரம்பில் ஆற்றலான்" என அனுமனுக்குள் நுழைந்து கொண்டு கம்பன் இவ்வாறு பேசுகிறான்.(சூலி- சிவபெருமான். சூலம் என்னும் ஆயுதத்தைக் கையில் தாங்கியுள்ளதால் இங்கு 'சூலி' எனப்பட்டான்).

திக்கனைத்திலும் உள்ள கடல்களுக்கு நாள்தோறும் சென்று, அட்ட மூர்த்தமாய் நிற்கும் பரம்பொருளைப் பூசித்து வரும் சைவ சீலன் தான் வாலி என்பதை, கம்பன் அனுமன் வாயிலாகப் பேசிப் புரிய வைப்பதைக் காண்போம். "எட்டுமாதிரம் இறுதி, நாளும் உற்று அட்டமூர்த்தி தாள் பணியும் ஆற்றலான்" என்பது வாலிபற்றி அனுமன் சொல்லும் செய்தியாகும். இங்கு அட்டமூர்த்தி என்பது சிவபெருமானை. நிலம், நீர், நெருப்பு, வளி, வான், கதிர், மதி, ஆன்மா என்னும் இந்த எண் வகை எழிலார் கோலங்களில், இறைவன் மருவியுள்ளமையால் அட்டமூர்த்தி எனப் பேசப்பட்டான். சைவ சித்தாந்தம் கூறும் இறை, உயிர், தளை எனும் முப்பொருள் தத்துவத்தின் வித்தகர் கோலம் இது எனச் சாத்திரம் வல்லார் சொல்வர்.

வாலியை மறைந்திருந்து அம்பெய்த இராமனும் வாலியின் சிவப்பேற்றை உணர்ந்து, சிந்தையில் நிறைவு கொண்டு உவந்து அவனிடம் பேசுகிறான்.

"காலன் ஆற்றல் கடிந்த கணிச்சியான்

பாலின் ஆற்றிய பக்தி பயத்தலான்

*மாலினால் தருவன பெரும் பூதங்கள்*

*நாலின் ஆற்றலும் ஆற்றுழி நண்ணினாய்" என்பது அப்பாடல்.*

*"காலன் ஆற்றல் கடிந்த கணிச்சியான்" என்பது சிவபெருமானைக் குறித்து வந்த தொடர். மார்க்கக்கண்டற்காகக் காலனை காலால் உதைத்த அட்ட வீரட்டச் செயல்களுள் ஒன்று. காலன் ஆற்றல் கடிந்த கணிச்சியானாகிய இறைவன் பால் அன்புபூண்டொழுகியவன் வாலி என்பதையும், அந்த அன்பு பக்தியாகப் பழுத்துக் கனிந்த போது, வாலிபெற்ற வரம்பில்லாத ஆற்றல்களையும் காட்டியமைவது மேற்கண்ட பாடலாகும்.*



*இவ்வாறு அட்ட மூர்த்த கோலம், அட்ட வீரட்டச் செயல் ஆகியவற்றில், அவன் உள்ளம் ஈடுபாடு கொண்டிருந்தாலும் அவற்றையும் விஞ்சி, அவன் சித்தத்தில் செறிந்து நின்று சிந்தையை ஆட்கொண்ட சிவக்கோலம் எது? அதுவே அம்மையப்பர் திருக்கோலம். சிவபரம் பொருளை, அம்மையப்பராகக் கண்டு வணங்கு வது பழ மரபு. இதைத் தொன்மைக் கோலம்' என்பார் மாணிக்கவாசகர். இத்தகைய ஒரு காட்சியை நீல மேனி வாலிழை பாகத்து ஒருவனாக ஐங்குறுநூறு ஓவியம் தீட்டிக் காட்டுகிறது. 'கண்ணுதலோன் பாகத்து*

*மங்கை உருவாய்' மகிழ்பவானாகச் செஞ்சொற் சிலம்பு சொல்லோவியமாக்கிக் காட்டுகிறது.*

*சைவ சமயத்திற்கு வாய்த்துள்ள தனிப்பெரும் சிறப்புக்களுள் ஒன்று, இறைவனை ஆணாய்ப் பெண்ணாய் வேறு பிரித்து அறியாது, ஆணும் பெண்ணுமாக ஒன்றாகக் கொண்டு, அதை அம்மையப்பராகக் கண்டு வழிபடுவதாகும். பெண்மையும் ஆண்மையுமாய் உலகம் இயங்கிடும் உண்மை, இறைவனில் விளங்கி நிற்கும் கோலம். இத்தகைய சக்தியோடு கூடிய சிவத்தையே, வாலி தியானித்துப் பூசித்து வந்தான். இவ் உண்மை அன்றன்று அவன் உடனிருந்து கண்டறிந்த அவன் மகன் அங்கதன் வாய்மொழியால் வெளிப்படுகிறது.*

*"பஞ்சின் மெல்லடியாள் பங்கன் பாதுகம் அல்லது யாதும் அஞ்சலித்து அறியாச் செங்கை" என்பது அவன் வாய்மொழி, பஞ்சின் மெல்லடியாள் என்னும் தொடர் இங்கு உமாதேவியைக் குறித்து நின்றது. 'பஞ்சின் மெல்லடியாள் பங்கன்' என்பது மாதொருபாகனாகிய சிவபெருமானை. 'பங்கன்' என்னும் சொல், தன் திருவுருவில் தேவி சரிபாதியாய் மருதி இருப்பது கருதி. பாதுகம்' எனும் சொல் திருவடிகளை குறித்து நின்றது.*

*பஞ்சின் மெல்லடியாள் பங்கன் எனும் தொடரும், தொடர்ப் பொருளும் சேர்ந்து தரும் செய்தி என்ன? வாலி வழிபட்டு மகிழ்ந்த திருக்கோலம், மாதொருபாகனாகிய அம்மையப்பர் கோலம் என்பது தானே.*

*வாலி சிவபெருமான் மீது பூண்டிருந்த பக்தியின் ஊற்றத்திற்கு, உறுதிபட்ட நெஞ்சப் பான்மைக்கு, ஒரு நெறிய மனம் வைத்துயர்ந்த மாட்சிக்கு, மகுடம் அமைக்கும் தொடர் தான் "பங்கன் பாதுகம் அல்லது யாதும் அஞ்சலித்து அறியாச் செங்கை" என்பதாகும். சிவபெருமான் திருவடிகளைத் தவிர வேறு யாரையும் கும்பிட்டு அறியாத கைகளை உடையவன் வாலி என இங்கு இசைக்கப்பட்டுள்ளான்.*

*'திருப்பெருந்துறையுறை சிவனே! தொழுவனோ? பிறரைத் துதிப்பனோ? எனக்கு ஓர் துணை என நினைவேனோ?' என்பார் மாணிக்கவாசகர். அத்தகைய ஒரு ஊற்றத்தை, உணர்வை, புறந்தொழா மாண்பை, வாலியும் பெற்றுத் திகழ்ந்தான் என்பதும் இங்கு நினைக்கத் தகும்.*

*சிவபரம் பொருளின் அருட் துறையுள் படிந்து திளைத்த பரம நீர்மையனாக, நியம நிட்டையுடன் ஈசனைப் பூசித்து வந்தவனாக, அட்ட மூர்த்தத்தில் ஆழ்ந்து ஈடுபட்டவனாக, ஈரெழிற்கோலமாய உமையொருபாகனைத் தனது வழிபடு கடவுளாக வகுத்துக் கொண்டவனாக, சிவனை அன்றிப் பிற தெய்வத்தைக் கனவிலும் கருதாதவனாகத் திகழ்ந்த வாலி பற்றிய நலத்த செய்திகள், நம் சிந்தையில் நிறைந்து நிற்கட்டும்.*

# பண்டைய வணிகமும் - வணிக முறைகளும்

-- அ. திவ்யகுமாரி கண்ணம்மா
ஐயை உலகத் தமிழ் மகளிர் மன்றம்.



மனித பரிணாம வளர்ச்சியில் முக்கியமான ஒரு மைல்கல் என்பது வணிகம் ஆகும். பல கடற்கோள்களைச் சந்தித்தத் தமிழர்கள் பல நிலைகளில் வணிகம் மேற்கொண்டு வந்தனர். நமக்குக் கிடைத்துள்ள வணிகச் சான்றுகளை இடைச் சங்கம் மற்றும் கடைச் சங்கத்தின் இலக்கியங்கள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. இதைவிடப் பழமையான காலத்தில் கற்கோடரிகள் பயன்படுத்திய தொன்மையான குடி, நம் தமிழ்க் குடி.

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளோடு முன்தோன்றிய மூத்த குடி நம் குடி. கல்லில் இருந்து 10செ மீ மண் உருவாக 1000 ஆண்டுகள் ஆகும் என இன்றைய ஆய்வாளர்கள் கூறுகின்றனர். குறிஞ்சி தோன்றி மருதம் தோன்றாக் காலத்தில் தோன்றிய பூர்வகுடி நம் குடி.

காலப்போக்கில் தமிழகம் சிறு சிறு பகுதிகளாகப் பிரிந்து, பல குறுநிலத் தலைவர்களாலும், படைத் தலைவர்களாலும், பல பழங்குடி அரசர்களாலும் ஆளப்பட்டு வந்தது. தொழில் பெருகியது. வணிகர்கள் குழுவாகவும் , வணிகக் குழுக்கள் தனி நிறுவனங்களாகவும் செயல்பட்டன.

தொழிலுக்கு ஏற்றவாறு தனித்தனியே தெருக்களை வகைப்படுத்தி இருந்தனர். வாசனைப் பொருட்கள் விற்போர் ஒரு தனித் தெருவில் குடி இருந்தனர். நெசவாளிகள் தனிப்பகுதியில் வசித்தனர். பட்டும் பொன்னும் அணிகலன்களும் விற்போர் தனிவீதியில் இருந்தனர். பண்டங்களைக் குவித்து விற்ற தெரு கூலவீதி எனப்பட்டது. கூலம் என்பது உணவுப் பொருள்களாகிய நெல் புல் முதலிய பதினெட்டு வகைத் தானியங்களை விற்கும் இடம். இதுவே கூலக்கடை என்று சங்கக் காலத்தில் அழைக்கப்பட்டது.

மதுரையில் கூலக்கடை வைத்து வாணிகம் செய்த புலவராகிய சாத்தனார் கூலவாணிகன் என்று குறிக்கப்படுகின்றார். அப்பம் விற்போர், கள் விற்போர், மீன், வெற்றிலை, இறைச்சி, எண்ணெய், பொன் வெள்ளி செம்புப் பாத்திரக் கடைகள் வைத்திருப்போர், பொம்மைகள் விற்போர், சித்திர வேலைக்காரர், தச்சர், கம்மாளர், தோல் தொழிலாளர், விளையாட்டுக் கருவிகள் செய்வோர், சிறு தொழில் செய்பவர்கள் என இவர்கள் எல்லாம் ஒரு பகுதியில் வாழ்ந்து வந்தனர்.



இங்கே வண்டிகளில் வியாபாரிகள் வீதி வீதியாகச் சென்று பசைகளையும் சாம்பிராணியையும் விற்பனை செய்தனர்; அகலமான வீதிகளில் பட்டாடைகள், பவழம், சந்தனக் கட்டைகள், அகில் மரங்கள், குறையில்லாத முத்துகள், மதிப்புமிக்க ரத்தினங்கள், பொன் ஆகியவை அளவிட முடியாமல் அடுக்கிவைக்கப்பட்டிருந்தன; மற்றொரு தெருவில் தானியங்களும் மற்ற பொருட்களும் குவியல் குவியலாக அடுக்கி வைக்கப் பட்டிருந்தன; இனிப்புகள், மீன், கள், வெள்ளை உப்பு, இறைச்சி, எண்ணெய் ஆகியவற்றை மக்கள் விற்க ஏதுவாகத் தனித்தனிப் பகுதிகள் பிரித்து விடப்பட்டிருந்தன.

இதுவே மருவூர்ப்பாக்கம் எனப்பட்டது. இது நகரத்தின் மையத்தில் இருந்தது. யவனர்கள், சீனர்கள், சாவகர்கள் போன்ற அயல்நாட்டு வணிகர்களின் குடியிருப்புகள் மருவூர்ப்பாக்கத்தில் அமைந்திருந்தன .

உள்நாட்டு வணிகர்கள், அந்தணர்கள், மருத்துவர்கள், சோதிடர்கள், முத்து நகைகளைச் செய்பவர்கள், சங்கு அறுப்பவர்கள், பித்தளை-தாமிரக் கொல்லர்கள், தோல் தொழிலாளர்கள், பழத் தோலால் ஆன ஆபரணங்களைத் தயாரிக்கும் கலைஞர்கள் போன்ற கைவினைத் தொழிலாளர்களும், கல்வியில் சிறந்த புலவர்கள், ஆடல் மகளிர், அரசவை மகளிர் ஆகியோர் தங்கியிருந்த இடம் பட்டினப் பாக்கம் எனப்பட்டது.

இலக்கியச் சான்றுகளை எடுப்பதில் இருக்கும் சிக்கல் என்னவென்றால், சில விடயங்களை இலக்கியங்கள் மிகைப்படுத்தி காட்சிப்படுத்துவதாக சில அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால் கீழடி ஆய்வு இலக்கியச் சான்றுகள் கற்பனை அல்ல என்பதை நமக்கு எடுத்துக் கூறுகிறன.

இன்றும் கூட சென்னை சவுகார்பேட்டைப் பகுதியில் மளிகைப் பொருட்களுக்குத் தனித் தெருவும், துணி வகைகளுக்குத் தனித் தெருவும், பழங்கள், பூக்கள் என எல்லாவற்றுக்கும் தனித்தனி தெருக்கள் இருப்பதைக் காணமுடிகிறது. தொன்று தொட்டு வணிகம் நடைபெற்ற இடமாக சவுகார்பேட்டை இருந்திருக்க வேண்டும். இங்குச் செட்டியார் கடைகளே அதிகம். தெருக்களின் பெயரும் அவர்கள் பெயரிலேயே இருக்கின்றன. அன்று முதல் இன்று வரை வணிகம் பல மாற்றங்கள் அடைந்தாலும் வழக்கங்கள்

ஒன்றே. சவுகார்பேட்டை பூக்கடை, வண்ணாரப்பேட்டை கந்தசாமிக் கோயில் தெரு போன்ற இடங்களுக்குப் பொருட்கள் வாங்கச் செல்லும் போது தெரு முழுக்க வித விதமான பொருட்களைப் பார்க்கும் போது எத்தனை ஆனந்தம். ஆயிரம் வலைத்தளங்கள் வந்தாலும் தொட்டு நுகர்ந்து பார்த்து வாங்கும் ஆனந்தமே தனி. கந்தசாமிக் கோயில் தெருவில் விற்கும் நாட்டு மருந்துகளின் வாசனை ஆளையே தூக்கும்.

இன்றைய தரமில்லாத பொருட்களும் நெகிழிகளும் குப்பைகளாகச் சந்தையில் குவிந்து கிடக்கும் காலத்திலேயே சந்தைக்குச் செல்லும் அனுபவம் இப்படி இருக்கிறது என்றால் அக்காலப் புகார், மதுரை போன்ற நகரச் சந்தைகளைச் சிந்தித்துப் பாருங்கள்.



வணிகம் அல்லும் பகலும் நடைபெற்றது. இரவில் நடைபெற்ற அங்காடியை "அல்லங்காடி" என்றும், பகலில் நடைபெற்ற அங்காடியை "நாளங்காடி" என்றும் அழைத்தனர். இரவு நேரக் கடைகளில் விற்கப்படும் பொருட்களை அடையாளம் கண்டுகொள்வதற்காகவே, கடைகளில் விற்கப்படும் பொருட்களின் உருவத்தைக் கொடியில் வரைந்து அதை அல்லங்காடிகளின் மேற்கூரைகளில் பறக்க விடுவார்கள்.

இரவில் அல்லங்காடியில் மலர்கள், உணவுப் பொருட்கள் ஆகியவற்றை விற்கும் கடைகளில் வணிகர்கள் விளக்குகளை ஏற்றி வைத்திருந்தனர். நகைகளைச் செய்யும் திறமையான பொறகொல்லர்களின் இடத்திலும் விளக்குகள் இருந்தன. இனிப்புப் பொருட்களை விற்பனை செய்யும் வணிகர்களால் வரிசையாகத் தீபங்கள் ஏற்றப்பட்டு இருந்தன. உணவுப் பொருட்களை விற்பனை செய்யும் வணிகர்கள் உயரமான இடத்தில் ஏற்றி வைத்த விளக்குகள், கள் விற்கும் பெண்களால் ஏற்றி வைக்கப்பட்ட விளக்குகள், மீன் வியாபாரிகளின் விளக்குகள், கப்பல்களுக்கு வழிகாட்டும் கலங்கரை விளக்கத்தில் எரியும் தீபம், மீனவர்கள் படகுகளில் ஏற்றி வைத்த விளக்குகள், பல்வேறு நாடுகளிலிருந்து வந்தவர்களும், கிடங்குகளின் காவலர்களும் ஏற்றிவைத்தவை போன்ற விளக்குகளால் புகார் நகரம் தேவர்களின் நகரம் பூமிக்கு வந்தது போல ஒளிபெற்று விளங்கியதாக சிலப்பதிகாரம் கூறுகிறது.

இப்படி எங்குத் திரும்பினாலும் வணிகப் பொருட்கள் நிறைந்திருந்தன. தங்கம் வெள்ளி முத்துகள் விலைமதிப்பற்ற பொருட்கள்! அப்படிப்பட்ட இடத்தில் களவு நடக்க வழியில்லாமல் போகுமா? நாட்டின் வர்த்தகப் பாதைகளைப் பாதுகாப்பதும், வர்த்தகர்களைச் சாலைகளில் நடைபெறும் வழிப்பறியிலிருந்தும் கொள்ளைகளிலிருந்து பாதுகாப்பதும் ஒரு அரசின் முக்கியமான பணி அல்லவா. இதற்காகவே இரவில் அல்லங்காடிகளில் படைகள் சுற்றிச் சுற்றி வந்ததாகவும் வில் வீரர்கள் பாதுகாப்புப் படை வணிகப் பாதைகளில் சாத்துகளோடு உடன் சென்றதாகவும் நகரப் பாதுகாப்புப் பற்றியும் வணிகப் பாதுகாப்புப் பற்றியும் மதுரைக் காஞ்சி எடுத்துக் கூறுகிறது. அதற்கான செலவுகளை அரசு வரியாகவும் சுங்கமாகவும் வசூலித்தது.

வணிகர்கள் நிலவழியாகச் செல்லும் பொருட்களுக்குச் சாலை வரியும், வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பொருட்களுக்குத் துறைமுகங்களில் சுங்கமும் வசூலிக்கப்பட்டன. அரசின் நேரடித் தலையீடு இல்லாததனால் வணிகம் சங்ககாலத்தில் வான்புகழை எட்டியது. அரசருக்குச் சேர வேண்டிய சுங்கத்தை வசூலிக்கப் பல நிலைப் பணியாட்கள் தனியாக இருந்தனர். கடமை தவறாது சுழன்று கொண்டே இருக்கும் சூரியனைப் போலத் தளராமல் உழைத்து வரிகளை வசூல் செய்துகொண்டிருந்தனர் என்றும்; சுங்கச் சாவடிக்கெனத் தனித் தெருக்கள் இருந்ததையும் அங்கு அதிகாரிகள் விலையுயர்ந்த பொருட்கள் அடங்கிய பொதிகளின் மேலும் கப்பலில் ஏற்றப்படும் பொதிகளிலும் அரசு (வில், புலி, மீன்) இலச்சினையைப் பொறிக்கின்றனர் என்றும் சிலம்பு கூறுகிறது. இன்றைய தளவாடங்கள் ஒழுங்குமுறைப் படுத்தும் வணிக முதிர்ச்சியை 3000 வருடங்களுக்கு முன்னரே நமது தமிழகம் கண்டுவிட்டது. அக்காலத்தில் வணிகத்தில் நேர்மையும் வணிக மேன்மையும் இருந்தது.

வணிகர்கள் பெருமளவு சமண சமயத்திற்கு ஆதரவு அளித்திருக்கின்றனர். சமணத்தின் முக்கிய நோக்கம் பிறப்பு இறப்புச் சுழற்சியிலிருந்து விடுதலை



அடைவதாகும். அகிம்சை, உண்மை, கற்பு நெறி, திருடாமை நேர்மை போன்ற கொள்கைகளைப் பின்பற்றியும் தவறு இழைத்தால் பிறவிச் சுழற்சியிலிருந்து விடுபட முடியாது என்ற நம்பிக்கை கொண்டும் இருந்ததால் வணிகர்களிடம் உண்மை

இருந்தது. வணிகக் குல மகளான கண்ணகி சமண நோன்பு ஏற்று கற்பு நெறி வழி வந்தவள். கண்ணகி பற்றிய செய்திகள் தமிழகத்தைக் காட்டிலும் கேரளத்திலும் ஈழத்திலும் அதிகம். தொன்றுதொட்டு நிலவி வந்த பல வழிபாட்டு முறைகள் தமிழ்நாட்டில் நடைபெற்ற இடைவிடாத போர்களால் அழிந்திருக்கலாம்.

தமிழ்நாட்டில் கண்ணகி நீதி தவறிய அரசனை வீழ்த்திய வீரத் தாயாக விளங்குகிறாள். ஆனால் ஈழத்தில் கண்ணகிக்கு இருக்கும் செல்வாக்கு வேறு. பழங்காலத்தில், ஈழப் பழங்குடிகளான நாகர்களுக்குக் குலதெய்வமாக விளங்கியது "நாகமங்கலை". நாகமங்கலை வழிபாடே, பின்பு அறிமுகமான பத்தினி வழிபாட்டுடன் இணைந்து இன்றுள்ளவாறு கண்ணகியின் வழிபாடாக வளர்ந்துள்ளது என்று அறியமுடிகின்றது. பழங்குடி நாகர்கள் அதிகம் வாழ்ந்ததனால் இப்பகுதி, "நாகர்முனை" எனப் பெயர் பெற்று விளங்கியதாகவும் சொல்லப்படுகின்றது. அந்நாகர்களின் குலதெய்வமாக விளங்கிய "நாகமங்கலை" ஆலயங்கள் பல சைவ எழுச்சியை அடுத்து, வைதிக வழிபாட்டுக்குட்பட்ட அம்பிகை ஆலயங்களாக மாற்றப்பட்டுவிட்டன. இலங்கையில் கண்ணகி வழிபாடு ஒரு தொன்மை வாய்ந்த நம்பிக்கையின் வெளிப்பாடாகும்.



கண்ணகி பற்றி நமக்குத் தெரிந்தது சிலம்பு மூலமே. ஆனால் மட்டக்களப்புப் பகுதியில் உள்ள கோவில்களில் படிக்கப்படும் கண்ணகி வரலாறு கண்ணகியின் பெயராலோ அல்லது சிலம்பின் பெயராலோ அழைக்கப்படுவதில்லை. வழக்குரை காவியம் அல்லது வழக்குரை என்றே அழைக்கப் படுகிறது. இதில் வரம்பெறு காதை தொடங்கி குளிர்ச்சிக் காதை வரையிலான பதினொரு காதைகள் உள்ளன. வழக்குரைக் காவியம் ஏறக்குறைய 2220 பாடல்களைக் கொண்டுள்ளது.

அதில் பாண்டிய நாட்டில் புதுவகையான மாங்கனி ஒன்று காணப்பட்டது. கண்ணுக்குத் தெரிந்த அக்கனி அதனைப் பறிக்க யாரேனும் மரத்தில் ஏறிச்சென்றால் மறைந்துவிடும். பாண்டிய மன்னன் அம்பெய்து அக்கனியை வீழ்த்தினான். ஆனால் அக்கனி நிலத்தில் விழாது அந்தரத்தில் தொங்கியது. அதனைப் பிடிக்க அரசன் கையை நீட்டியபோது அந்தக் கனி நெருப்புக்

கோளமாகி அரசன் கைகளில் வீழ்ந்தது. அரசன் பயந்து கனியை நிலத்தில் விட்டெறிந்தான். நிலத்தில் வீழ்ந்த கனியை அரசன் மனைவியிடம் கொடுத்தான்.

அக்கனி தெய்வத் தன்மை பொருந்தியது என அவள் அதனை ஒரு பொற்குடத்தில் இட்டு வைத்தாள். மூன்றாம் நாள் பொற்குடத்தை அரசவைக்குக் கொண்டு வந்தபோது மாங்கனி பெண்குழந்தையாக மாறியிருந்தது. அச்சமயம் அரண்மனைச் சோதிடர்கள் இக்குழந்தை

"பீடுறும் மதுரை அரசோடழியக் காரணமாகும்"

எனச் சொன்னதால் மன்னன் குழந்தையை அழகிய பேழை ஒன்றில் வைத்து ஆற்றில் விட்டான்.

இக்காலத்தில் சோழ நாட்டில் கரிகால் பெருவளத்தான் ஆட்சி செய்து வந்தான். சோழ நாட்டின் தலை நகரமாகிய காவிரிப்பூம்பட்டினத்தில் மாசாத்துவான், மாநாய்கன் என்ற இரண்டு வணிகர்கள் வாழ்ந்தனர். மாசாத்துவானுக்கு கோவலன் என்றொரு மகன் இருந்தான். மாநாய்கனுக்கு குழந்தைப்பேறு இல்லாதிருந்தது. இருவரும் ஒரு நாள் கடற்கரையில் நிற்கும்போது குழந்தையுடன் பேழை வருவதைக் கண்டனர். மாநாய்கன் அக்குழந்தையை தன் குழந்தையாக ஏற்றுக்கொண்டான். தன் வாழ்வில் ஒளியும் மகிழ்ச்சியும் ஏற்றிய காரணத்தால் குழந்தைக்கு கண்ணகை எனப் பெயர் சூட்டி வளர்த்து வந்தான். இதன் பின்னர், வழக்குரை கதை பெருமளவு சிலம்புடன் ஒத்தும், சில இடங்களில் மாறுபட்டும் செல்கிறது.

முதலாம் இராஜராஜ சோழன் இலங்கையைக் கைப்பற்றிச் சிங்கள மன்னனாகிய ஐந்தாவது மகிந்தனையும் அவனது மனைவியையும் சிறைபிடித்து வந்தான். அவர்கள் இருவரும் சகல மரியாதைகளுடன் ஒரு மாளிகையில் காவலில் வைக்கப்பட்டிருந்தனர். சிங்கள மன்னனின் மனைவி பத்தினி வழிபாடு இல்லாமையால் வருந்தினாள். பண்பும் கருணையும் மிகவும் உடையவனான இராஜராஜ சோழன் அவள் விருப்பப்படி கண்ணகி கோவில் அமைத்துக் கொடுத்ததோடு பத்தினி விழாவும் அங்கு நடைபெறச் செய்கிறார். அக்காலத்தில் சோழநாட்டில் பத்தினி வழிபாடு மறைந்து போயிருந்த காரணத்தால் தமிழக மக்கள் கண்ணகியைச் சிங்கள நாட்டிலிருந்து வந்த தெய்வமாகக் கருதி சிங்கள நாச்சி கோவில் என அக்கோவிலை அழைத்தனர். நாளடைவில் அப்பெயர் செங்களாச்சி எனத் திரிபடைந்து பின்னர் சாதாரண மக்களால் செங்காச்சி அம்மன் என அழைக்கப்பட்டது.

இப்படிப்பட்ட பெருங்குடியைச் சேர்ந்த கண்ணகி சமணம் தாண்டி, பெண்தெய்வ வழிபாடு தாண்டி, சைவமாக மாறி இன்றும் அம்மனாகத்

தமிழகத்திலும் கேரளம், இலங்கை, சாவகம், மலேசியா எனப் பல மக்களாலும் சமணம், பௌத்தம், சைவம் எனப் பல மதங்களாலும் தெய்வமாக வழிபடப்பட்டு வருகின்றாள். இப்படி வணிகக் குடிகளின் பெருமையைப் பேசும் இலக்கியங்கள் வணிகர்களை மூன்றாக வகுக்கின்றது. அவை மூன்று நிலை வியாபாரம் செய்யும் செல்வச் செட்டிமார்கள் ஆவர்.

அவர்கள் இப்பர், கவிப்பர், பெருங்குடியர் என்னும் மூவகை வணிகர்கள் ஆவர். யானைமீதும், காளைமீதும், குதிரை மீதும் ஒரு குடைக்கீழ் நிற்கும்போது, அவர்களின் செல்வம் முழுவதும் அவர்களைச் சுற்றிக் குவிக்கப்பட்டால், அந்தக் குவியலுக்கு அடுத்துள்ள எதையும் அவர்களால் காண இயலாது.

இப்பர் என்பார் குறைந்த செல்வமுடைய வணிகர்; கவிப்பர் என்பார் நடுத்தரமான செல்வமுடைய வணிகர்; பெருங்குடியர் என்பார் பெருஞ் செல்வமுடைய வணிகர். பெருங்குடியர் என்பார் அரசனைப் போன்ற பெருஞ் செல்வமும் அரும்புகழும் படைத்த பெரிய வியாபாரிகள் ஆவர்.

இத்தனைச் செல்வ வளம் கொண்ட இவர்கள் இறைவனுக்கும் பழிக்கும் அஞ்சினர். நேர்மையையும் சொல் தவறாமையையும் கடைப்பிடித்தனர். வணிகர்களின் கொடை என்பதை எளிதில் ஒரு கட்டுரையாகப் பார்த்துவிட முடியாது. வணிகர்கள் சமுதாயத்தில் மிக உயர்ந்த குணங்கள் கொண்டவர்களாக மதிக்கப்பட்டார்கள், அவர்கள் கொடை வழங்குபவர்களாக சிலப்பதிகாரம் கூறுகிறது. உலகம் முழுவதும் பொருள் தேடிச் சென்று தனது ஊருக்குத் திரும்பித் தன் இடத்து மக்களுக்கும் கலாசாரம் திருவிழா போன்ற விழாக்களையும் ஆதரித்துச் சிறப்பித்தனர். இதனால் அவர்களது செல்வாக்கு ஓங்கியது.



இதுவரை நமக்குக் கிடைத்தவை பிராமி கல்வெட்டுகளில் கிடைத்த ஆறு வணிகக் கொடை சம்பந்தமான கல்வெட்டுகள் ஆகும். சில கல்வெட்டுகளில் மிகுந்த செல்வந்தர்கள் அல்லாதவர் கூட கொடை அளித்தது பதியப்பட்டுள்ளது. சமண பௌத்த மடங்களுக்கு அளிக்கும் நன்கொடைகள்

நன்மை அளிக்கும் என்று நம்பப்பட்டது. சமணப் படுக்கைகள் செய்வதும் சுனைகளை உருவாக்குவதும் இவர்கள் செய்த கொடைகளில் முதன்மையானவை . வணிகத்தை ஆதரிக்கும் ஒரு வழியாகவும் சமூகத்தில் அங்கீகாரத்தையும் மதிப்பையும் இந்த நன்கொடைகள் வழங்கின.



அழகர்மலை, மாங்குளம், புகளூர் முதலிய இடங்களிலுள்ள கல்வெட்டுகளும் சமண வணிகத் தொடர்பும் இதற்குச் சிறந்த சான்றுகளாக உள்ளன. அழகர் மலையில் மொத்தம் 13 கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றுள் 5 மதுரையைச் சுற்றியுள்ள வணிகர்கள் செய்த கொடை பற்றிக் கூறுகின்றன. இவற்றுடன் சேர்த்துப் பிற அனைத்துமே சமணத் துறவிக்குச் செய்து கொடுத்த படுக்கை குறித்தே பேசுகின்றன.

*1."மதிரை பொன்கொல்வன் அதன்அதன்"*

மதுரையைச் சார்ந்த பொன் வணிகன் இங்கு குறிப்பிடப்படுகின்றான்

*2. "உபு வாணிகன் வியகன்"*

வியகன் என்ற உப்பு வணிகன்

*3. "பாணித வாணிகன் நெடுமலன்"*

பணிதம் என்றால் சர்க்கரை, சர்க்கரை வியாபாரி நெடுமலன்.

*4. "கொழு வாணிகன் எளசந்தன்"*

கலப்பை வியாபாரம் செய்யும் வணிகன்

*5. "வெண்பள்ளி அறுவை வணிகன் எளஅ அடன்"*

*வெண்பள்ளி என்ற ஊரைச் சார்ந்த இளஆட்டன் (எளஅஅடன்) துணி வியாபாரி.*

*மாங்குளம் வணிகக் கல்வெட்டு..*

*1."கணிய நந்தஸிரிகுவன்*

*வெள் அறைய் நிகமது*

*காவிதி கழிதிக அந்தை*

*அஸீதன் பிணஉ கொடுப்பிதோ"*

*வெள் அறைய் என்னும் ஊரிலுள்ள, வணிகக் குழுவைச் சேர்ந்த அந்தை அஸீதன் என்பவன் கணிய நதாஸிரியருக்கு பிணஉ (சன்னல், கயிறுகட்டு, பிளவு) கொடுத்ததைக் கூறுகிறது. வாணிகத்தில் சிறந்து விளங்குபவருக்குக் காவிதி என்று பட்டப்பெயர் வழங்குவது தெரிய வருகிறது. காழிதிகம் என்பது முத்தைக் குறிக்கும். எனவே அந்தை அஸிதன் ஒரு முத்து வணிகன் என்பது தெளிவு.*

*2. "வெள்அறை நிகமத்தோர் கொட்டியோர்"*

*நிகமம் என்ற சொல் வணிகக் குழுவினைக் குறிக்கும். இந்தப் பாறையைக் கொட்டிக் கொடுத்தவர் வெள் அறை என்னும் ஊரிலுள்ள வணிகக் குழுக்கள் ஆவர்.*

*புகளூர் கல்வெட்டு ஆதாரம் . . .*

*1."கரு ஊர் பொன் வாணிகன் நத்தி அதிட்டாணம்"*

*கருஊரைச் சேர்ந்த பொன்வாணிகனான் நத்தி கொடுத்த அதிட்டாணம்*

*2. "எ ண் ணை வாணிகன் வெ நி ஆ த ன் அ தி ட் டா ண ம்"*

*எண்ணை வாணிகனான வெநி ஆதன் கொடுத்த அதிட்டானம்.*

*வணிகர்களின் பொது வாழ்வைப் போல் தனிப்பட்ட வாழ்வும் செல்வச் செழிப்புடன் இருந்தது. வணிகர்களின் வீடுகள் பற்றியும் இலக்கியங்கள் சிறப்பித்துக் கூறுகின்றன. பருந்துகள் வந்து அமரக்கூடிய உயரமான அடுக்குகளைக் கொண்ட வீடுகளில் கலைநயம் மிக்க வேலைப்பாடுகள் கொண்ட சாளரங்களும் குறைவில்லாத உணவுப் பொருட்களும் அங்கு இருந்ததாகவும் மதிப்பும் அழகும் மிக்க பொருட்கள் குவித்து வைக்கப்பட்டு இருப்பதாகவும் பருந்துகள் ஓய்வெடுக்க அந்த வீட்டின் மாடிகளில் தங்குவதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளன. புகாரின் வணிகர்கள் நுகத்தடியைப் போல நேரானவர்கள் என்றும் அவமானத்திற்கு அஞ்சுபவர்கள் பொருளுக்கு*

அதிக விலையை விதிக்க மாட்டார்கள் என அவர்களின் பண்புகளை மதுரைக்காஞ்சியும் சிலப்பதிகாரமும் கூறுகிறன. இதுபோன்ற வணிகர்கள் பன்னெடுங்காலமாகப் புகாரில் வாழ்வதாகவும் சிலம்பு கூறுகிறது. வணிகர்கள் நாட்டில் கிடைக்காத பல பொருட்கள் கிடைக்க வழி செய்து நகர மேன்மையையும் வளர்த்தனர்.

வணிகர்கள் தங்கள் செல்வத்தை வளர்த்துக்கொள்வதோடு வீரத்தையும் வளர்த்துக்கொண்டனர். அரசு அளித்த பாதுகாப்பு வீரர்களையும் தாண்டி தனக்கென தனிப் படைகள் வைத்திருந்தனர். பல கோட்டைகளும் கிடங்குகளும் கட்டி பொருட்களை அடுக்கி வைத்தனர் . புகார் நகரில் வெள்ளிமடை மன்றம் என்று ஒரு கிடங்கு இருந்தது , வணிகம் செய்ய வந்த வெளிநாட்டு வணிகர்களின் பொருட்கள் மீது அப்பொருளின் எடை அளவு பெயர் ஆகியவை பொறிக்கப்பட்ட பின்னரே கிடங்குகளுக்குள் அனுமதிக்கப்பட்டது. கிடங்குகளின் வாசல்களில் காவலர்கள் இல்லை. பொருட்கள் திருடப்பட்டால் பொருட்களைச் சுமந்தபடி நகரைச் சுற்றிவர வேண்டும் என்ற தண்டனை நிலுவையில் இருந்தது. பின்னர் அந்த பொருள் அவர்களிடமிருந்து கைப்பற்றப்படும். இதனால் மக்களுக்குத் திருடும் எண்ணம் இருந்ததில்லை .



கடல் கடந்து செல்லும் வணிகர்களுக்கு எத்தனை வழிப்பறித் தொந்தரவுகள் இருந்திருக்கும். எத்தனை வீரர்களை அழைத்துச் சென்றிருப்பார்கள். அக்கால வணிகக் காட்சிகளைக் காட்சிப்படுத்திப் பார்க்கும் போது பிரமாண்டமும் அதன் பின்னிருக்கும் கடின உழைப்பும் வாழ்வியலும் தெரிகிறது.

# நம் பெருமாள்!

*-- ஜனக்புரி எஸ். சீனிவாசன்*
*தமிழாசிரியர் (ஓய்வு), டில்லி.*



*வைகாசி, 17 (31.5.23) ஸ்ரீ அழகிய மணவாளப் பெருமாள் (நம்பெருமாள்) ஸ்ரீரங்கம் திரும்பிய நாள்! 652 ஆண்டுகளுக்கு முன்னர், பரீதாபி ஆண்டு (1371) இதே வைகாசி 17ஆம் நாள், ஸ்ரீ அழகிய மணவாளப் பெருமாள் 48 ஆண்டுகள் அந்நிய வாசம் முடிந்து, ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளினார்! 1323 ஆம் ஆண்டு, பங்குனி மாதம், ஊலுக்கான் என்னும் முஸ்லீம் மன்னன் (முகமது பின் துக்ளக்) படைகள் ஸ்ரீரங்கத்தை முற்றுகையிட்டன. ஸ்ரீரங்கநாதப் பெருமாள் உற்சவர், அழகிய மணவாளர் பங்குனி உற்சவம், எட்டாம் நாள் புறப்பாடு கண்டருளி, வடதிருக்காவேரியில் உள்ள பன்றியாழ்வான் சன்னிதிக்கு எழுந்தருளியிருந்தார்.*

*அப்போது முஸ்லீம் படைகள் சமயபுரம் அருகே நெருங்கிவிட்டனர் என்று செய்தி வந்தது. உடனே அங்கு எழுந்தருளியிருந்த ஸ்ரீபிள்ளைலோகாசார்யரும் மற்ற ஆசார்ய புருஷர்களும், பெருமாளுக்குத் திரையிடச்செய்து, பெருமாளையும் உபய நாச்சிமார்களையும் பல்லக்கில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு தெற்கு நோக்கிப் புறப்பட்டு விட்டனர்.*

*அதே சமயம், கோயிலுக்குள் பெரிய பெருமாள் கர்பக்கிரஹத்தை கற்கள் வைத்து சுவர் எழுப்பி மூடிவிட்டனர். ஸ்ரீரங்கநாயகி தாயார் விக்கிரகத்தை, தாயார் சன்னிதி வில்வ மரத்தடியில் பூமிக்குள் மறைத்து வைத்துவிட்டுச் சென்றனர். அங்கே பன்றியாழ்வான் சன்னிதி மண்டபத்தில் பெரும் திரளாகக் கூடியிருந்த 12000 பக்தர்களுக்கு இவை எதுவும் தெரியாது. பெருமாளுக்குச் சாத்துப்படி அலங்காரத்திற்காகத் திரையிடப்பட்டுள்ளது என நினைத்துக் காத்திருந்தனர்.*

*சிறிது நேரத்தில் முஸ்லீம் படைகள் ஸ்ரீரங்கத்தை நோக்கி அந்த வழியாக வந்தன. கூடியிருந்த பக்தர்கள் அவர்களை உள்ளே விடாமல் துணிந்து எதிர்த்து நின்றனர். முஸ்லீம் படைகள் ஈவு, இரக்கமின்றி அவர்கள் அனைவரையும் கொடூரமாக வெட்டிக் கொன்றனர். அரங்கனைக் காக்க, அடியார்கள் தம் இன்னுயிர் நீத்த இந்த நிகழ்வு, ''பன்றியாழ்வான் சன்னிதியில் பன்னீராயிரம் வைஷ்ணவர்கள் முடிதிருத்திய கலகம்'' என்று அறியப்படுகிறது!*

தெற்கு நோக்கிச் சென்ற பிள்ளைலோகாசார்யர் கோஷ்டி, மதுரைக்கு அருகே உள்ள ஜோதிஷ்குடி என்னும் இடத்துக்குச் சென்றனர். அழகிய மணவாளனையும்,

உபய நாச்சிமார்களையும், அங்குள்ள ஆனைமலையின் பின்புறம் உள்ள குகையில் எழுந்தருளப்பண்ணி சில ஆண்டுகள் அங்கேயே இருந்தனர். பிள்ளைலோகாசார்யர், அங்கு நித்ய திருவாராதனைகளை நடத்தி வந்தார். சிறிது காலத்தில் அங்கேயே அவர் பரமபதம் அடைந்தார்.

அவரது சீடர்கள் அழகிய மணவாளனை எடுத்துக் கொண்டு, மேலும் தெற்கே சென்று, மலையாள தேசம் வழியாக, கர்நாடகா (மேல்கோட்டை) சென்று,




அங்கிருந்து, சந்திரகிரி (திருப்பதி) திருமலை சென்றனர். சுமார் பத்து இடங்களில் ஓரிடத்திலிருந்து, மற்றொரு இடமோ/தேசமோ பெருமாள் எழுந்தருளி இருந்தார்.(காரணம் ஆங்காங்கே நடைபெற்ற ஆட்சி மாற்றமே). பிள்ளைலோகாசார்யரின் சிஷ்யர்கள் மிகுந்த சிரமப்பட்டு அழகிய மணவாளப்பெருமாளை ஏளப்பள்ளிக் கொண்டு பல இடங்களுக்கும் செல்லும் போது, பலர் உயிரிழந்தனர் (மூப்பு/நோய் காரணமாக).

திருத்தாழ்வரை தாசர் வம்சத்தார் மூன்று பேர் மட்டுமே உயிரோடு இருந்தனர். குருகூர்தாசர், அவரது மைத்துனர் வில்லிபுத்தூர் தாசர் மற்றும் குருகூர்தாசரின் மகன் ஸ்ரீராமதாசர் என்னும் மூவர் மட்டுமே. இவர்களில் குருகூர்தாசர் பெருமாளுக்காகத் தன் உயிரையும் பொருட்படுத்தாது, துருக்கியரிடம் இருந்து, பெருமாளைக் காக்கவேண்டி மலைமுகட்டில் இருந்து இறங்கும் போது, கீழே சரிந்து தன் உயிரை மாய்த்துக் கொண்டார். இதனைக் கண்ட வில்லிபுத்தூர் தாசர், மூத்தவர் இறந்ததும் தானும் இறந்தார். ஸ்ரீராமதாசர் என்னும் மூன்றாம் கொடவர் மட்டும் பதினெட்டு வருடங்கள், தனியே சந்திரகிரி காட்டில் பேசுவதற்குத் துணை இல்லாமல், சித்த ப்ரம்மை பிடித்து அரங்கனோடு மட்டும் பேசிக் கொண்டு, காட்டில் கிடைத்த கனி/கிழங்குகளை அரங்கனுக்கு நைவேத்யம் செய்து, தானும் உயிர் வாழ்ந்து, அரங்கனுக்கு எந்தவிதத்திலும் குறை ஏற்படாதவாறு கைங்கரியம் செய்தார்!

*வல்லபன், தத்தன் என்னும் இளைஞர்கள் இருவரும் அரங்கனைத் தேடி, சிங்கழகர் என்பவரிடம் அரங்கனின் அடையாளங்களைக் கேட்டு, இறுதியில் அவர் சந்திரகிரி காட்டில் இருக்கிறார் என்பதைத் தெரிந்து கொண்டு அங்கே சென்று, விஜயநகரப் பேரரசரான கம்பன்னரிடம் சொல்ல, அழகிய மணவாளன் திருமலை வந்து அடைந்தார். திருமலையில் த்வஜஸ்தம்பத்துக்கு முன் வலதுபுறம் உள்ள ரங்கமண்டபத்தில்தான் நம்பெருமாள் பல ஆண்டுகள் இருந்தார்.*

*செஞ்சியை ஆண்ட கோபண்ண உடையார் திருமலையிலிருந்து, அழகிய மணவாளப் பெருமாளை ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளப் பண்ணினார். 48 வருடங்கள் கழித்து, 1371-பரிதாபி ஆண்டு, வைகாசி மாதம் 17 ஆம் தேதி நம்பெருமாள் மீண்டும் திருவரங்கம் திரும்பினார். அப்போது 48 வருடங்களுக்கு முன்னர் கோயிலில் பணியாற்றிய அர்ச்சகர்கள்/பணியாளர் கள் யாரும் உயிருடன் இல்லை. ஸ்ரீரங்கத்தில் இருந்த பெரும்பாலான ஸ்ரீவைஷ்ணவர்களும் இல்லை. இடைக்காலத்தில், வேறோரு உற்சவரைப் பிரதிஷ்டை செய்து, அவரையே அழகிய மணவாளப் பெருமாளாக ஆராதித்துக் கொண்டிருந்தனர். எனவே 48 ஆண்டுகள் கழித்துத் திரும்பிய பெருமாளை, ஆதிபெருமாள் என்று யாரும் நம்பத் தயாராக இல்லை. திருத்தாழ்வரை தாசரான ராமதாசர் ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்தபோது பார்த்தவர்கள் யாரும் அச்சமயத்தில் இல்லை. எனவே பெருமாளை கோவிலுக்குள் உடனே அனுமதிக்கவில்லை! அது மட்டுமல்லாமல், திருத்தாழ்வரை ஸ்ரீராமதாசரை, குழப்பம் விளைவிக்க வந்தவர் என்று கேவலப்படுத்தினர். ஆர்யபடாள் வாசலுக்கு வெளியே, குலசேகரன் திருச்சுற்றில் உள்ள திருமங்கை ஆழ்வார் மண்டபத்தில் எழுந்தருளச் செய்தார்கள்.*

*பெருமாளுக்கு வஸ்திரம் துவைத்துத் தரும் ஈரங்கொல்லி (வண்ணார்) குடும்பத்தைச் சேர்ந்த, கண் பார்வை இழந்த 93 வயது பெரியவர் ஒருவர் கோயிலுக்கு வந்து பெருமாளின் ஈரவாடைத் தீர்த்தம் மூலம் தாம், வந்துள்ள பெருமாள், ஆதி அழகியமணவாளரா, இல்லையா என்று சொல்ல முடியும் என்றார். மண்டபத்தில் எழுந்தருளியிருந்த பெருமாளுக்குத் திருமஞ்சனம் செய்து, அர்ச்சகர் ஈரவாடைத் தீர்த்தத்தை அவருக்கு வழங்க அதை ஸ்வீகரித்து, தீர்த்தத்தின் வாசனையை உணர்ந்து, “இவரே நம் பெருமாள்! நம் பெருமாள்!! நம்பெருமாள்!!!” என்று உற்சாகத்தில் துள்ளிக் குதித்துக் கொண்டாடினார். அந்த ஈரங்கொல்லி கொண்டாடிய ‘நம்பெருமாள்’ என்னும் பெயரே அழகிய மணவாளருக்கு இன்று வரை நிலைத்து விட்டது! இடைக்காலத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்ட உற்சவப் பெருமாள் திருவரங்க மாளிகையார் என்னும் திருநாமத்தோடு, நம்பெருமாளுக்கு இடது புறத்தில் சேவை சாதிக்கிறார்!*

# *RKM* குதிரை எனும் இராஜகெம்பீரம் ஆண்டிச்சாமி கோயில் ஜல்லிக்கட்டு காளை.



**முனைவர் ப. தேவி அறிவுச் செல்வம்,**

*கோயில் கட்டிடக்கலை மற்றும்*
*சிற்பத்துறை கள ஆய்வாளர்*

*2000 வருடங்களுக்கும் மேலாக தமிழர்களின் வாழ்வில் இடம் பிடித்து இருக்கும் காளைகளை பற்றியும் ஜல்லிக்கட்டு பற்றியும் பாறை ஓவியங்கள், சங்க இலக்கியங்கள் மற்றும் நடு கற்கள் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது. சேலம் அருங்காட்சியகத்தில் வீரர் ஒருவர் காளையின் முன்புறம் நின்று கொண்டு கொம்பை பிடித்த மாதிரியான நடுகல், கோவை தொண்டாமுத்தூர் பகுதியில் இடது கையில் காளையை பிடித்த படியும் வலது கையால் ஓங்கிய வாளுடன் நின்ற நிலையிலான நடுகல்லும், திருவண்ணாமலை கலசப்பாக்கம் பகுதியில் காளையின் திமிலை பிடித்து அடக்குவது மாதிரியான வீரனின் நடுகல் சிற்பமும், திருப்பத்தூர் பகுதியில் இடது பக்கம் திரும்பி நின்று இடது கையால் காளையின் கொம்பை பிடித்தும் வலது கையில் சாட்டையுடன் நிற்பது மாதிரியான நடுகல்லும், வாணியம்பாடி பகுதியில் நின்ற நிலையில் இருக்கும் ஆண், பெண் உருவங்களுக்கு கீழே நிமிர்ந்து பார்த்த நிலையில் காளை மற்றும் அதன் முன்புறம் அடுக்குப் பானைகள் கொண்ட இரண்டு வரிசையுடனான நடுகல்லும், மதுரை அம்மாபட்டி பகுதியில் இரண்டு ஆண் வீரர்கள் வில், அம்புடன் இடது காலை எடுத்து வைத்து போருக்கு செல்வது மாதிரியான நடு கல்லில் இருவரின் தலைகளுக்கு நடுவில் திமிலுடன் கூடிய காளை உருவத்துடனான நடுகல்லும் காணப்படுகிறது. இவ்வாறு தொன்மையான வரலாற்றை கொண்ட ஜல்லிக்கட்டு காளை ஒன்று இராஜகெம்பீரம் பகுதியில் ஜல்லிக்கட்டுக்கு தயாராகி கொண்டிருக்கிறது. அக்காளையின் பெயரே RKM குதிரை என்னும் இராஜகம்பீரம் ஆண்டிச்சாமி கோயில் காளை.*

*இராஜகெம்பீரம் ஊர் இளைஞர்கள் கிட்டத்தட்ட 25 பேர் இணைந்து வளர்க்கும் ஜல்லிக்கட்டு காளையின் பெயர் தான் RKM குதிரை. ஒரு வயதில் இருந்து ஜல்லிக்கட்டுக்காக வளர்க்கப்பட்டு இப்பொழுது நாலு வருடங்களுக்குப் பிறகு 8 பல்லுடன் இருக்கிறது.*

***காளையின் நிறம்:** கரிச எனும் கருப்பு நிறம். பின்னங்காலின் கணுக்காலுக்கு கீழ் பகுதியானது வெள்ளையாக இருக்கிறது.*

*காளையின் இருப்பிடம்: இராஜகெம்பீரம் பகுதியில் தரிசு நிலமாக இருந்த சிறு இடத்தை RKM குதிரை நண்பர்கள் குழுவினரால் புங்கை, வேம்பு, கொடிக்காய்,*

*நெல்லிக்காய் போன்ற மரங்களைக் கொண்டு சிறு தோப்பாக உருவாக்கப்பட்ட இடத்தில் இக்காளை வளர்க்கப்பட்டுக் கொண்டிருக்கிறது.*

*மருத்துவ முறை: கால்நடை மருத்துவரின் ஆலோசனைப்படி ஆறு மாதத்திற்கு ஒருமுறை வயிற்றுப் பூச்சிக் கடிக்கான மருந்து மற்றும் தேவையான பாதுகாப்பான மருத்துவ வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது.*

*உணவு முறை: முதல் நாள் ஊற வைத்த பச்சரிசியினை அடுத்த நாள் காலையில் உணவாகவும் பகல் நேரங்களில் வைக்கோல் புல் போன்றவைகளும், இரவு நேரத்தில் பருத்திக் கொட்டை, புண்ணாக்கு போன்றவையும் கொடுக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது. முக்கியமாக வீட்டில் இருந்து கிடைக்கும் தேவையற்ற கழனி தண்ணீர், காய்கறி கழிவுகளை உணவாக இக் காளைக்கு வழங்குவது கிடையாது.*




***ஜல்லிக்கட்டுக்கு தயார்படுத்தும் முறை:***

*மண்ணை குத்தி பழக்குவது, அருகில் இருக்கும் கண்மாயில் நீச்சல் போட்டு பழக்குவது, நடை பயிற்சி கொடுப்பது மற்றும் உணவு அளவுகளை அதிகரிப்பது போன்றவைகள் கிட்டத்தட்ட ஆறு மாதத்திற்கு அளிக்கப்படுகிறது.*

*காளையின் சிறப்பு: இதுவரை உள்ளூர் மற்றும் வெளியூர் ஜல்லிக்கட்டில் 10 முறைக்கும் மேல் கலந்து கொண்டு வெற்றி பெற்றிருக்கிறது. பொதுவாக தை மாதத்தில் இருந்து வைகாசி மாதம் வரை ஜல்லிக்கட்டுக்கு இக் காளை அழைத்துச் செல்லப்படுகிறது. வாடிவாசலில் திறந்து விடப்பட்ட இக்காளையானது நேரடியாக வெளியேறாமல் நின்று கட்டையைப் பார்த்து சுற்றி விளையாடிவிட்டே வெளியேறும்.*

# உன்னோடு உரையாடுதல் - நின்னோடு ஸம்வேதிக்கான் – மொழிபெயர்ப்பு ஒப்பாய்வு

***(கவிஞர் முத்தமிழ் விரும்பி கவிதை நுண் ஆய்விருக்கை மெய்நிகர் கூட்ட்டத்தில் நிகழ்த்திய உரை)***

**முனைவர் க. லதா**

*இணைப்பேராசிரியர் & தமிழ்த்துறைத்தலைவர்,*
*தமிழ் உயராய்வு மையம்*
*பாத்திமா கல்லூரி, மதுரை.*



‘சென்றிடுவீர் எட்டுத்திக்கும் கலைச்செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்’ என்றும் ‘மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் பேசித்திரிவதிலோர் மகிமையில்லை’ என்றும் பாடினார் மகாகவி பாரதி. உலகம் முழுமையும் காணப்படும் நல்லன எல்லாம் தமிழ் மக்கள் அறியவேண்டும். தமிழ்கூறும் நல்லுலகு அறிந்த அனைத்தும் உலக மக்களைச் சென்றடைய வேண்டும். இது மகாகவியின் கனவு. பாரதியின் கனவை இன்று பல படைப்பாளர்கள் நனவாக்கிக் கொண்டிருக்கின்றனர். அவ்வகையில் பொறிஞர், கவிஞர், கட்டுரையாளர், பாடலாசிரியர், நாடகம் மற்றும் குறும்பட நடிகர், சிறுகதையாளர், இலக்கியச் செயல்பாட்டாளர் கவிஞர் எனப் பன்முகம் கொண்ட திரு முத்தமிழ் விரும்பியின் படைப்புகள் பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அவர் எழுதிய ‘உன்னோடு




உரையாடுதல்’ என்னும் கவிதைத் தொகுப்பு மலையாள மொழியில் ‘நின்னோடு ஸம்வேதிக்கான்’ என்ற தலைப்பில் மலையாளக் கவிஞர் திரு. வரதன் அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அதனை விமரிசனக் கண்ணோட்டத்தில் இக்கட்டுரை ஆய்கிறது.

கவிஞர் முத்தமிழ்விரும்பி சிறந்த கவிதைகளைப் படைத்து வருகிறார். அவருடைய கவிதைகள் உலகமொழிகளில் மொழிபெயர்க்கப்-பட்டுள்ளன. ‘உன்னோடு உரையாடுதல்’ தொகுதியை மலையாளத்தில் ‘நின்னோடு ஸம்வேதிக்கான்’ என்ற பெயரில் மலையாளக் கவிஞர் திரு.வரதன் மொழிபெயர்த்துள்ளார். சங்க

*அகப்பாடல்களின் சாயலில் இக்கவிதைகள் அமைந்துள்ளன. தலைவியின் அன்பினை, காதலை யாசிக்கும் தலைவனின் உணர்வுகளைக் கவிஞர் முத்தமிழ்விரும்பி தண்டமிழில் வடித்தது போலவே மலையாள மொழியில் கவிஞர் திரு.வரதன் மொழிபெயர்த்துள்ளார்.*

*‘உன்னோடு உரையாடுதல்’ எனத் தமிழிலும் ‘நின்னோடு ஸம்வேதிக்கான்’ என மலையாளத்திலும் தலைப்பினைக்கொண்ட இத்தொகுப்பு மொத்தம் 57 கவிதைகளைக் கொண்டது. ஒவ்வொரு கவிதையும் தலைவனின் மன உணர்வுகளைத் துல்லியமாக வெளிப்படுத்துகின்றது. ‘நின்னோடு ஸம்வேதிக்கான்’ என்னும் முதல் கவிதை தொடங்கி ‘மறுபடி’ என்னும் 57ஆவது கவிதை வரையிலும் கவிஞர் முத்தமிழ்விரும்பியின் கவிதைகளை உள்ளவாறே உணர்வுபூர்வமாக எடுத்தியம்பியுள்ளார் மொழிபெயர்ப்பாளர்.*

*உரையாடல் அல்லது உரையாடுதல் என்பதற்கு, ஒருவர் மற்றவருடன் கலந்து பேசுதல் என்று பொருள். மனிதர்கள் செய்கின்ற பேச்சுத் தொழில் தங்களுக்குள் ஒரு உறவுமுறையை ஏற்படுத்திக்கொள்ள நிகழ்வது. ஒருவருக்கொருவர் அளவளாவிக்கொள்ள நிகழ்வது. இந்த வரையறையை நினைவில் கொண்டு ‘நின்னோடு ஸம்வேதிக்கான்’ கவிதைத் தொகுதியை நோக்கும்போது தலைவன் தலைவியுடன் உரையாட எண்ணுதல், தனக்குள்ளே உரையாடுவது போல அமைந்துள்ளது. Dialogue ஆக (இருவர் பேசுவதாக) அமைய வேண்டிய உரையாடல் Monologue ஆக (தனக்குள்ளே பேசுவதாக) அமைந்துள்ளது. இத்தொகுப்பில் அமையும் கவிதைகள், தலைவனின் காதலைத் தலைவிக்கு மெல்ல முணுமுணுக்கின்ற (Murmuring) ஓசையில் சொல்லுகின்றன.*

*தலைவியோடு பேச நினைக்கும் தலைவனின் நிலையை கவிஞர் முத்தமிழ் விரும்பி,*

> *“இரண்டு மூன்று*
> *சொற்கள்*
> *பேசி*
> *மூன்றரை நாட்களைக் கடந்து*
> *விடுகிறாய்*
> *ஒற்றைச் சொல்லைக்*
> *கடக்க முடியாதவன்*
> *ஓடம் ஏறியென்ன”*

*எனப் படைத்துள்ளார், இதனை ‘நின்னோடு ஸம்வேதிக்கான்’ என்ற தலைப்பில் மொழிபெயர்ப்பாளர் கீழ்வருமாறு மொழிபெயர்த்துள்ளார்.*

*“ரண்டுமூன்னு வாக்குகள்*
*மொழியானாய்*
*மூன்னர திவஸம்*
*நீக்குந்நு நீ*
*ஒற்றவாக்கினெ கடக்கானாவாத்தவன்*
*வள்ளத்தில் கயறியிட்டெந்து?”*

*இக்கவிதையை வாசிக்கும் போது ‘கூரையேறிக் கோழி பிடிக்கத் தெரியாதவன் வானமேறி வைகுந்தம் போனானாம்’ என்ற அங்கதச் சுவை நிறைந்த பழமொழி நினைவுக்கு வருகிறது. கூரையேறவே தெரியாத ஒருவனுக்கு எப்படி வானமேறமுடியும் ? ஒருநாளைக்கு ஒரு வார்த்தை வீதம் தலைவி மூன்று நாட்களுக்கு மூன்றரை வார்த்தைகள் பேசுவாளாம். மிண்டாப்பூச்சயான தலைவியின் ஒரு வார்த்தையையே கடக்க இயலாதவன் தலைவன் என்பதைக் கவிஞர் ஒரு உவமை வாயிலாக விளக்குகிறார். குறள் போலக் குறுகியிருந்து தலைவனின் ஆழ்மன உணர்வுகளைத் தெற்றெனக் காட்டுகிறது இவ்வுவமை. தோணியில் ஏறியவன் ஆற்றைக் கடக்கலாம். ஆனால் அவளுடைய ஒரு வார்த்தையே கடல்போலிருக்க, அதிலிருந்து அவன் எப்படி மீளுவான் ? அளந்து அளந்து தலைவி பேசும் வார்த்தைகளே கடலாய்த் தென்படுகிறது அவனுக்கு. தன்னால் கரையேற முடியாது என்று இக்கவிதையில் கூறுகிறான்.*

*நொடிக்கு நொடி மாறும் மனம் என்பதால் தான் மனம் ஒரு குரங்கென்பர். கவிஞர் முத்தமிழ் விரும்பி, ‘ஊஞ்சல் மனசு’ என்ற தலைப்பில்,*

*“இடமும் வலமும்*
*பார்க்க மட்டும்*
*முன்னும் பின்னும்*
*ஆட்டுவிக்கிறது*
*ஊஞ்சல் மனசு*
*இறைக்க இறைக்க*
*பொங்கி வழிகிறது*
*நினைவின்*
*கேணி”*

*என்று எழுதிய கவிதையில் மனத்தை, ஊஞ்சல் என்றும் கிணறு என்றும் உவமித்துள்ளார். இதனைக் கவிஞர் வரதன் மலையாள மொழியில்,*

*‘‘இடத்தும் வலத்தும்*
*நோக்கான் மாத்ரம்*
*முன்னோட்டும் பின்னோட்டும்*
*ஆடிக்குகயாணு*

ஊஞ்ஞால் மனஸ்ஸ்
கோரிக்கோரியெடுக்கே
நிறஞ்சு கவியுந்நு
ஓர்ம்ம தன்
கிணறு''

என்று பெயர்த்துள்ளார். ஒரு மொழிபெயர்ப்பு மூலத்தை ஒத்திருக்கவேண்டும் என்பது நியதி. அவ்வகையில் இறைக்க இறைக்க ஊறும் மனம் என்னும் கிணறு எனவும் அந்த மனம் தலைவியின் நினைவுகளால் நிரம்பி வழிகிறது எனவும் இக்கவிதை வாசகரின் கற்பனையில் விரிகிறது.

சங்க இலக்கியச் சாயலில் அமைந்துள்ள இக்கவிதைத் தொகுப்பில் சங்க மாந்தர்களும் இடம்பெறுகின்றனர். இதனை, 'இவளை எப்படித்தான்' என்ற கவிதையில் கவிஞர்,

''தோழியும் இல்லை.
தேர்ப்பாகனும் அப்படியே
தோழனுமில்லை
பாங்கனும்
ம்ஹூம்
என் அழைப்புகளை
நிராகரிக்கும்
இவளை எப்படித்தான்''


கவிஞர் முத்தமிழ் விரும்பி

என்று பாடியுள்ளார். இதனைத்,

''தோழியுமில்ல
தேராளியுமெங்ஙினெ,
தோழருமில்ல
பங்குகாரனும்
ம்ஹூம்
என்றெ க்ஷணனங்ஙளெ
நிரஸிக்குமிவளெ
எங்ஙினெ..... ?'' என்று பெயர்த்துள்ளார்

தோழி, தேர்ப்பாகன், தோழன், பாங்கன் எனச் சங்ககால மாந்தர்களை இடம்பெறச் செய்கிறார் கவிஞர். முற்சுட்டியவர்களின்றி, சங்கத் தலைவன், தலைவியிடையே அன்பு வளராது. அது போல, தன் மனங்கவர்ந்த தலைவியின் காதலைப்பெற 'நான் என் செய்வேன்' எனத் தவிக்கும் காதலனின் மனவுணர்வைப் பிரதிபலிக்கிறது. இக்கவிதை சங்ககால மாந்தர்களைச் சுட்டும் குறுங்கவிதையெனினும், இறுதி மூன்றடிகளில் நவீனக் கவிதையாகிறது.

*அலைபேசியில் அவன் அழைக்கும் போதெல்லாம் அவள் அந்த அழைப்பை நிராகரிக்கிறாள். உதவுவதற்கு எவருமின்றித், தன் காதலைத் தெரிவிக்க வழியுமின்றித் தத்தளிக்கும் ஆண் மனத்தை இக்கவிதை விவரிக்கிறது.*

*கவிஞர் முத்தமிழ்விரும்பியின் கவிதைகளில் கருத்தையும், நடையையும் பிற உத்திகளையும் உள்ளவாறே மொழிபெயர்த்துக் கவிதையாக தரும் விதம் சிறப்பாகக் கைவருகிறது. மொழிபெயர்ப்பாளருக்கு. மூலக்கவிதையைக் கவிதையாகவே உணர்வு பூர்வமாகத் தருவது, மொழிபெயர்ப்பில் சற்றுக் கடினம் எனினும் இத்தொகுப்பு முழுமையும் மூலக்கவிதைகளை வாசிக்கின்ற உணர்வையே தருகிறது. கைக்கு அகப்படுகிறதா என்ன? என்ற கவிதை,*

*அதிக பாதுகாப்புடனும்*
*அதி பத்திரமாயும்*
*வைக்கப்படும்*
*எதுவும்*
*காலாகாலத்தில்*
*கைக்கு*
*அகப்படுகிறதா என்ன?*
*உன்னைத்தான்*
*கேட்டு*
*உறுதி கொள்ள முடியும்"*

*என்று கவிஞரால் பாடப்பட்டுள்ளது. இது, "கைவசமாகுந்நோ எந்தோ" என்ற தலைப்பில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.*

*"அதிக காவலாயும்*
*அதி பத்ரமாயும்*
*வெக்கும்*
*எதும்*
*காலாந்தரங்களில்*
*கைலெத்துந்நுவோ*
*எந்தோ ?*
*நின்னோடு*
*சோதிக்கணம்."*

*தலைவி மிகப்பத்திரமாகப் பாதுகாக்கப்பட வேண்டியவள். எனினும் இன்னும் தனக்குக் கிடைக்கவில்லை என்ற ஆதங்கமும் பாதுகாக்கப்பட்ட எதுவும் தாமதமாகத்தான் கிடைக்குமோ என்ற ஐயமும் இங்கு கவிதையாக வெளிப்படுகிறது.*

*காதலன், தலைவிக்காகக் காத்திருக்கும் பொழுதுகளின் நீட்சியை ஒரு கவிதை பதிவு செய்கிறது.*

*இந்தப்பொழுதின்*
*நீட்சி*
*இன்றா மாலையா நாளைய*
*காலையா*
*.............*
*இவளில்லாப்*
*பொழுதுகளில் இவன்*
*காலம்*
*தேய்கிறதா?*

*என்று கவிஞர் முத்தமிழ் விரும்பி கவிதை படைக்க அதனை*

*“ஈ நாழிககள் நீண்டு*
*இந்து அஸ்தமனத்திலோ*
*நாளெ உதயத்தினோ*
*. . . . . . . . . . . . . . .*
*இவளில்லாத்த*
*நேரங்களில் இவன்*
*காலம்*
*கொழியுந்நுவோ ?”*

*என்று வரதன் மொழிபெயர்த்துள்ளார். தொடர்ந்து, சிலப்பதிகாரத்தின் புகார்க்காண்டத்தையும் கானல்வரியையும் குறிப்பிட்டுச் சொல்லும்போது பெரும்பிரிவின் தொடக்கமாய் அமையும் சிலப்பதிகாரக் கானல்வரியை நினைவூட்டுகிறது இக்கவிதை. நின்னோடு ஸம்வேதிக்கான் கவிதைத் தொகுப்பு, தலைவனின் தனிமையை, அவன் அவளுக்காகக் காத்திருக்கும் பொழுதுகளின் நீட்சியையே பெரும்பான்மையும் பதிவு செய்கிறது.*

*தனிமை மற்றும் காத்திருப்பு, அவற்றின் நீட்சி ஆகியவற்றுக்குக் காரணம் தயக்கம் என்பதாக, ‘ஒளி தேடும் தாவரம்’ கவிதையைப் படைத்துள்ளார் முத்தமிழ் விரும்பி.*

*“அழைக்குமிடத்தில்*
*நீயில்லை*
*அழைக்க வேண்டிய*
*நிலையில்லை*
*அழைக்கவேண்டும்*

என்று நினைத்துக்
கொள்கிறோம்''

இப்பாடலை, கவிஞர் வரதன் அவர்கள்,

''விளிக்குன்னிடத்து நீயில்ல
விளிக்காவுந்ந அவஸ்தயுமல்ல
விளிக்கணமெந்நு
விசாரிக்குந்நு நம்மள்''

எனப் பெயர்த்துள்ளார். அழைக்க வேண்டும் பேசவேண்டும் என்று மனம் எண்ணினாலும், தயக்கம் தடுக்கிறது. எனினும்,

''ஒளிதேடும்
தாவரம்
ஒவ்வொருவருக்குள்ளும்''

என்று தயக்கம் ஒரு நாள் உடையும் என்பதை முத்தமிழ் விரும்பி ஒரு தீர்வாக முன்வைக்கிறார். இதனை,

''நாமோருருத்தரும்
வெளிச்சத்தின்றெ
வள்ளிகள்
தேடுந்நு''

எனப் பெயர்த்துள்ளார் வரதன். தயக்கங்கள் உடைந்து வெளிச்சம் தேடும் தாவரங்கள் போல ஒருநாள் கலந்து பேசி உரையாடும் காலம் வரும் என்ற நம்பிக்கையை இக்கவிதை உணர்த்துகிறது.

'அவரவர் மனோசித்ரங்ஙள்' என்ற கவிதையில் கவிஞர், தலைவனின் காதல் ஒருதலையானது என்று சித்திரிக்கிறார். அவன் தன் வாழ்நாட்களைக் கழிக்கும் விதத்தைப் பற்றிக் குறிக்கிறார். அவன் நாட்களை நாழிகைகளாக்கி, அவற்றை வினாடிகளாக்கிப் பொழுதுகளைப் போக்குகிறான். தனிமை மிகக்கொடுமையாய் அவனை வதைக்கிறது. நிர்மூலமாக்குகிறது என்று அக்கவிதையில் கவிஞர் குறிப்பிடுகிறார்.

''நாட்களைப் பிரித்து
நாழிகைகளாய்
நிமிடங்கள் உடைத்து
வினாடிகளாய்ப்
புரள்கிறேன்''

என்று காத்திருப்பின் தவிப்பை அவர் பாடுகிறார். இதனை வரதன் அவர்கள்,

"நாள்களெ பிடிச்சு நாழிககளாக்கி
நாழிககளெ உடச்சு
வினாழிகளாய் மாற்றி
ஞான் சமயம் போக்குந்நூ"

என்று மொழிபெயர்த்துள்ளார். தனிமை, தயக்கம், காத்திருப்பு, எதிர்பார்ப்பு வெறுமை, வறட்சி என எதிர்மறை உணர்வுகளை மட்டுமே கொண்ட ஒருதலைக் காதலாளன் தலைவன் என்பதை இக்கவிதை வாசகர்க்கு உணர்த்துகிறது.

தலைவன், தன்னோடு உரையாட அழைக்கும் தலைவியானவள் ஒருபோதும் அவனுக்குச் செவிசாய்த்ததே இல்லை என்பதை, 'உறவ வரும் காலம்' என்ற கவிதை புலப்படுத்துகிறது.

"நீ
தோண்டும்
கிணறு வற்றாமல்
நீரூறும் காலம்
இடைவெளியை
நீயேன்
நிரப்பாமல்
இருக்கிறாய்"



இக்கவிதை மலையாள மொழியில்,

"நீர்
தொண்டும்
கிணர் வற்றாதெ
நீரூறும் காலம்
இடதோடுகளே
நீ எந்து கொண்டு நிறக்குந்நில்ல ?"

என மொழிபெயர்க்கப்பட்டு, தலைவியின் பாராமுகத்தைப் பாங்காய்ப் புலப்படுத்துகிறது.

தலைவியுடன் உரையாடுவதையே ஒரு வேள்வியாக, யாகமாக என்னும் தலைவன், பிரிவதற்கான காரணங்களை யோசிக்காமல் காலம் கடத்தாமல் அவளுடன் வாழ விரும்புகிறான். இந்த நிகழ்வினை,

"உன்னோடு உரையாடுதல்
ஒரு வேள்வி என்றிருக்க
நீயேனடி

*கேள்வியாய்ச் சிறுத்து*
*உறைகிறாய்''*

*என முத்தமிழ் விரும்பி பாடியுள்ளார். இப்பகுதி,*

*''நீயுமாயுள்ள*
*சம்ஸாரமே*
*ஒரு*
*யாகம் போலாகும்போழ்*
*ஒரு சோத்யமாய்*
*நீயெந்தினு*
*யாருமல்லாதாகுந்நு?*

*என்று பெயர்க்கப்பட்டுள்ளது. சொல்லாத சொல்லுக்கு வலிமை அதிகம் என்பர். ஆனால் தலைவனைப் பொருத்த மட்டில் தலைவியோடு சொல்லாடுதல் ஒரு வேள்விக்கு இணையானது என்கிறான்.*



*இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள கவிதைகள் தன்னுணர்ச்சிப்பாக்கள் போலக் காணப்படினும் கருத்துத் தொடர்பு கவிதைகளுக்குள் காணப்படுகிறது. ஒருவழியாக, காத்திருப்பு, தனிமை போன்ற உணர்வுகளுக்கு முற்றுப்புள்ளியாய் ஒரு கவிதை.*

*''உனக்கான*
*மல்லிகைச்சரம்*

*வாடுதே என்றேன்*
*வாடினாலும் வந்து*
*சூடுவேன் என்றாய்*
*நேரம் கழித்து வந்த*
*நிமிடமே*
*சூடினாய்*
*மலர்ந்தன*
*மனசுகள்''*

இந்த தொகுப்பில் தலைவனோடு இணங்கி அவனை மகிழ்விக்கும் நிகழ்வினைக் கூறும் ஒரு கவிதை இது. இக்கவிதையை வரதன் அவர்கள்,

*''நினக்காயுள்ள மல்லிப்பூமால*

*வாடுமென்று பறஞ்ஞெங்கிலும்*
*வாடியாலும் சூடுமெந்நு நீ பறஞ்ஞு*
*ஈ நேரம் கழிஞ்ஞ நேரத்தும்*
*நீ விடர்ந்த மனஸ்சுமாய் சூடியப்போழ்*
*மனஸ் நிறயுந்நு''*

என்று மொழிபெயர்த்துள்ளார். ஒரு மொழிப்படைப்பு இன்னொரு மொழிக்குப் பெயர்க்கப்படும்போது அப்படைப்பு மட்டும் பெறுமொழிவாசகர்க்கு அறிமுகமாவதில்லை. அம்மொழி சார்ந்த மக்களின் கலாச்சாரம், பண்பாடு, அறங்கள் என அனைத்தையும் பெறுமொழி வாசகனுக்கும் எடுத்தியம்புகின்றது. ஆடிப்பெருக்கு என்னும் நிகழ்வு இன்று ஆற்றங்கரையில் நிகழ்வதில்லை. அது ஒரு சடங்கென நின்றுபோயிற்று என்பதைக் கவிதை பதிவு செய்கிறது.

*''நாளை ஆடி பெருக்கு*
*நானும் வருகிறேன்*
*காவிரித் தீரத்துக்கு*
*நீயும் மாநகர்க்*
*குழாய்த் தண்ணீர்*
*எடுத்துக்கொள்.*
*அச்சுவெல்லம் பச்சரிசி*
*தேங்காய்த் துண்டுகள்*
*கலந்து*
*பால்யத்தை மீட்டுவோம்*
*அவரவர் ஏக்கங்களோடு''*

இக்கவிதையில் கவிஞர் முத்தமிழ்விரும்பி தலைவனின் பால்யகால நினைவுகளையும் சுற்றுச்சூழல் குறித்த அவலத்தையும் ஒருசேரப் பதிவு செய்கிறார். அதுபோலவே இக்கவிதை,

"நாளெ ஆடி பெருக்கு
ஞானும் வருந்நு
காவேரி தீரத்தேக்கு
பொது பைப்பில் நின்னு
வெள்ள மெடுத் தோளூ
அச்சு வெல்லவும் பச்சரியும்
தேங்ஙா பூளுகள் கலர்த்தி
செருப்பத்தெ யோர்க்காம்
அவரவருடெ விங்ஙலுமாய்"

என்று மலையாளத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. சிறுவயது நினைவுகளே மனத்திற்கு இதமானவை என்பதைக்கூறுவதோடு, சுற்றுச்சூழல் மாசுபாடு காரணமாக, காலநிலை மாறுபாடு, தவறிப் பெய்யும் மழை, வறட்சி, பெருவெள்ளம் என அனைத்து இயற்கைப் பேரிடர்களும் நிகழ்கின்றன என்பதைச் சுட்டுகிறது.



அன்பு நிறை மனத்துடன் தலைவன் உரையாட வந்தாலும் தலைவி அவனை நிராகரிக்கிறாள். வாழ்வின் ஒவ்வொரு மணித்துளியையும் அவள் விரயம் செய்கிறாள் என்பதை, 'ஏன் இப்படி விளையாடுகிறாய்' என்ற கவிதையில்,

"வீணே கழியட்டும்
நீ

விளையாடும்
பெருங்காலத்தின்
ஒரு துளி”

என்று பாடுகிறார். இதனை, ‘எந்தினு நீயிங்கனெ?’ என்ற கவிதையில் கவிஞர் வரதன்,

“நின் ஜீவிதம்
ஓரோ துள்ளியாய்
இங்கனெ வ்யர்த்தமாக்குந்நூ”

என்று பெயர்த்துள்ளார். மேலும், அழைக்கும் அலைபேசி கையிலிருந்தும் அழைக்க மனமில்லா அப்பெண்மையை,

“தகவல் தொடர்பைத்
துண்டித்து விட்டு
மகிழ்ந்திருப்பாயோ
ஊட்லென்பது
சிறு பிணக்குதான்
நீட்டித்து விடாதே
உங்கள் ஊரில்தான்
இருக்கிறேன்
அழைத்தால்
நிராகரித்து
அவமானப்படுத்துவாய் என்ற
அச்சத்தோடு.”

என்று கவிஞர் முத்தமிழ் விரும்பி கவிபாட, இக்கவிதை,

“என் நிலையறிஞ்ஞும்
என் உள்ச்சூடு அறியாத்த போல்
கையில் ஒரு ஃபோனுமாய்
ஆரெயும் விளிக்காதெயும்
மறுபடி பறயாதெயும்

எந்தினு நீ ஈ முகம் காணிக்குந்நூ?”
என்று மலையாளத்தில் பெயர்க்கப்பட்டுள்ளது.

நின்னோடு ஸம்வேதிக்கான் கவிதைத் தொகுப்பில், நிராசையுடன் தனிமையில், காத்திருப்பில் வருந்தும் தலைவன் “இடிக்கும் கேளிர் நும் குறை ஆக நிறுக்கல் ஆற்றினோ நன்றே” எனப் புலம்பும் குறுந்தொகைத் தலைவனை நினைவூட்டுகிறான். எத்தனை அவநம்பிக்கைகளுடன் வாழ்ந்தாலும்,

உடன்பயணிப்போர் வஞ்சித்தாலும் வாழ்க்கை வாழ்வதற்கே, அதனை வாழ்ந்தே தீர வேண்டும் என்ற கருத்தை முன் வைத்துள்ளார் கவிஞர் முத்தமிழ் விரும்பி. ஒரு வானவில் என்ற கவிதையில்,

''வாழ்க்கை ஒரு
வானவில்.
ஆனால்
உடன் பயணிப்பவர்
பல வேளைகளில்
சில நிறங்களை
அழிக்கின்றனர்.
என்ன செய்ய!
இருப்பினும்
வாழ்க்கை ஒரு வானவில்''

என்று இக்கருத்தைப் பதிவுசெய்கின்றார். இந்த செய்தியை, 'ஜீவிதமொரு வானவில்லு' என்ற கவிதையில், நம்பிக்கையே வாழ்க்கை என்பதை நினைவூட்டுகிறார் கவிஞர் வரதன்.

''ஜீவிதம் ஒரு வானவில்லு
பக்ஷே
ஸஹசாரிகள்
அதின்றெ வர்ண்ணங்ஙள் மாய்க்குந்நு
எந்நாலும்
ஜீவிதம்
ஒரு
வானவில்லு தன்னெ''

என்கிறார் அவர்.

மொத்தத்தில் தலைவியில்லா வெறுமையான வாழ்வில் அவளின் ஒற்றைச் சொல்லுக்காகக் காத்திருக்கின்ற தலைவனின் காதல் உணர்வுகளை, தனிமையை, எதிர்பார்ப்பை, ஏமாற்றங்களை அழகான சொல்லாடல்களோடு சுட்டிச்செல்கிறது நின்னோடு ஸம்வேதிக்கான் கவிதைத் தொகுப்பு. சங்க அகப்பாடல்களின் சாயலை அதிகம் கொண்டும் நவீனக் கருத்தாடல்களை ஆங்காங்கே சுட்டியும் செல்கிறது இத்தொகுப்பு. பொதுவாக கவிதை மொழிபெயர்ப்பு என்பது மிக அரிய செயல் என்ற கருத்து மாறி மூலப் படைப்பிற்கு இணையான மொழிபெயர்ப்புகளைப் பெறுமொழி வாசர்களுக்கு உள்ளவாறே தரமுடியும் என்பதற்குச் சான்றாக இம்மலையாள மொழிபெயர்ப்பு அமைந்து சிறக்கிறது.

# மூதூர் மதுரை

***(Friends of Madurai இன் நுண் ஆய்விருக்கை மெய் நிகர் கூட்டத்தில் ஆற்றிய உரை- 28.06.2023)***

**--முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி,**
*எழுத்தாளர், மொழிபெயர்ப்பாளர், பதிப்பாளர்.*



*"விழவு மலி மூதூர்" என்றும், "மண மதுரைச் சிலம்பு" (24:5) என்றும் "கிழக்கின் வெனிஸ் நகரம்" என்றும் பாராட்டப்படும் மதுரை மாநகர் 6000 ஆண்டுகள் பழமையானது. இங்குத் தொடர்ந்து மக்கள் 6000 ஆண்டுகளாக வசித்து வருகின்றனர். அன்று முதல் இன்று வரை பண்பாட்டுச் சிறப்புடைய பேரூராக மதுரை விளங்குகின்றது. கி.மு. நான்காம் நூற்றாண்டு முதல் இரண்டாம் நூற்றாண்டு வரை இருந்த கடைச்சங்கக் காலத்தில் மதுரையில் தமிழ்ச் சங்கம் சிறப்பாக இயங்கி வந்தது. அதற்கு மாங்குடி மருதன் தலைவனாக இருந்தார் என்பதற்கு இலக்கியச் சான்றுகள் உள்ளன.*

*ஏறு தழுவுதல், தண்ணீர்ச் சடங்குகள் செய்தல் (தவளை மற்றும் நாரைக்கு முக்தி அளிக்கக் கள்ளழகர் வருகை) போன்ற வளமைச் சடங்குகள் பல்லாயிரம் ஆண்டு காலமாக மதுரையில் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இவை ஆதி மனிதனிடம் இருந்த மந்திரச் சமயச் சடங்கு முறைகள் (magico religious rituals) ஆகும்.*

*மதுரை மாநகர் தமிழகத்தின் மூன்றாவது பெரிய நகரமாகவும் தேசிய அளவில் 44 ஆவது பெரிய நகரமாகவும் தற்காலத்தில் விளங்குகிறது. இப் பண்பாட்டுச் சிறப்புடைய மாநகரில் கல்வி அறிவு பெற்றோர் 82 சதவீதம் பேராவர். தேசிய அளவில் இது 78 சதவீதம் மட்டுமே.*

**இலக்கியம் மற்றும் புராணங்களில் மதுரை:**

*மதுரை மாநகர் பற்றிப் பல பண்டைய இலக்கியங்களும் புராணங்களும் குறிப்பிட்டுள்ளன. வால்மீகி ராமாயணம், "மதுரை மாநகரின் கோட்டைக் கதவுகள் பொன் மற்றும் முத்துக்களால் அலங்கரிக்கப்பட்டவை" என்கிறது. அர்ஜுனன், பாண்டிய நாட்டு இளவரசியைத் திருமணம் செய்த செய்தியை வியாசரின் பாரதம் குறிப்பிடுகிறது. இலங்கையின் வரலாறு கூறும் மகாவம்சம் கி. மு. 570) ஆம் ஆண்டு எழுதப்பட்டது. இந்நூல் இலங்கை மன்னன் விஜயன், பாண்டியன் மகளை மணம் புரிந்த வரலாற்றை எடுத்து இயம்புகின்றது.*

*சாணக்கியரின் அர்த்தசாஸ்திரம் (கி. மு. 370 முதல் 283 வரை) பாண்டிய நாட்டு முத்துக்கள் பற்றியும் பாண்டிய நாட்டில் நெய்யப்படும் மெல்லிய துகில் பற்றியும் குறிப்பிட்டுள்ளது. கிரேக்கப் பயணி மெகஸ்தனிஸ் (350 முதல் 290 வரை) கி. மு. மூன்றாம் நுற்றாண்டைச் சேர்ந்தவர். இவர் பாண்டிய நாட்டைப் பற்றிச் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். வரலாற்று ஆய்வாளர்களான பிளைனி (61 முதல் 112 வரை) டாலமி (90 முதல் 168 வரை), ஸ்ட்ராபோ (63 முதல் 24 வரை) கி.மு. ஆகியோர் மதுரை மாநகரின் சிறப்புகளையும் பாண்டிய மன்னனைப் பற்றியும் வியந்து தங்களது பயணக் குறிப்புகளில் குறிப்பிட்டுள்ளனர்.*

**ஆட்சி வரலாறு:**

*தொடக்கத்தில் சங்கக் கால பாண்டியரின் தலைநகராக மதுரை விளங்கியது. பின்பு களப்பிரர்கள் கைப்பற்றினர். கிபி 590 இல் மீண்டும் பாண்டியர் கைப்பற்றி ஆட்சி செய்தனர். ஒன்பதாம் நூற்றாண்டுக்குப் பிறகு சுமார் 300 ஆண்டு காலம் சோழர்களின் ஆட்சியின் கீழ் மதுரை மாநகர் இருந்தது. மதுரையை வெற்றி கொண்ட சோழன் மதுராந்தகன் எனப்பட்டான். 12 ஆம் நூற்றாண்டில் மதுரையை மீட்ட சுந்தரபாண்டியன் மதுரையில் ஆட்சிக் கட்டிலிலேறி பல கோயில் திருப்பணிகளையும் மக்கள் நலப் பணிகளையும் செய்தான். ஒரு நூற்றாண்டுக் காலம் பாண்டியரின் ஆட்சியின் கீழ் இருந்த மதுரை பிறகு டெல்லி சுல்தான்களின் பிடியில் சிக்கிக் கொண்டது. டெல்லி சுல்தான்களிடம் இருந்து பிரிந்து மதுரை சுல்தான்கள் தனி அரசு நடத்திய போது அவர்கள் ஆட்சியின் கீழ் மதுரை இருந்தது. கி.பி. 1378க்கு பிறகு விஜயநகரப் பேரரசு மதுரையைக் கைப்பற்றியது. இவ்வரசு சனாதன தர்மத்துக்குத் துணை போயிற்று. அந்தணர்களின் அதிகாரம் கொடி கட்டிப் பறந்தது. இவ்வரசு தனது பிரதிநிதியாக நாகம நாயக்கரை நியமித்தது. ஆனால் நாயக்கர்கள் 1559 முதல் மதுரையைத் தங்கள் வசமாக்கினர் 1736 வரை மதுரை நாயக்கர்களின் ஆட்சியில் மதுரை இருந்தது அப்போது பல வைணவக் கோயில்கள் கட்டப்பட்டன. சிவன் கோயில்களும் புனரமைக்கப்பட்டன.*

**இஸ்லாமியர் ஆட்சியில் மதுரை:**

*கி.பி.1740 முதல் 1754 வரை சந்தா சாகிப் மதுரையை ஆட்சி செய்தார். பின்பு ஆற்காடு நவாப் மற்றும் மருதநாயகம் எனப்படும் கான்சாகிப் 1725 முதல் 1764 வரை ஆட்சி செய்தனர். கிழக்கிந்திய கம்பெனி கி.பி.1801 இல் மதுரையை கையப்படுத்தியது. 1947இல் இந்தியா சுதந்திரம் அடைந்தபோது மதுரையும் விடுதலை பெற்றது. மதுரை மாநகர் இந்து, முஸ்லிம், பௌத்தம், சமணம் என்று பல சமயங்களைச் சேர்ந்த மன்னர்களின் ஆட்சியின் கீழ் இருந்தாலும் மதுரை தன்னுடைய பழமையையும் பண்பாட்டையும் ஒருபோதும் இழந்ததில்லை.*

**இலக்கியம் காட்டும் மதுரை:**

*மதுரை மூதூரின் சிறப்புகள் பற்றி பண்டைய சங்கத் தமிழ் இலக்கியங்களில் மதுரைக்காஞ்சி, பரிபாடல், சிலப்பதிகாரம் ஆகியவை சிறப்பாக எடுத்துக் கூறுகின்றன. மதுரைக்காஞ்சி மதுரையின் பெயரால் தோன்றிய சங்க நூலாகும். பரிபாடலில் மதுரையைப் பற்றிச் சில பாடல்கள் மட்டுமே கிடைத்திருக்கின்றன. சிலப்பதிகாரத்தில் இரண்டாவது காண்டம் மதுரைக் காண்டம் என்ற பெயரில் இருந்தாலும் மதுரை பற்றிய பாடல் வரிகள் நகர் காண் காதையில்தான் இடம் பெற்றுள்ளன. காலத்தால் பிற்பட்ட 14 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பரஞ்சோதி முனிவர் எழுதிய திருவிளையாடல் புராணத்தில் மதுரையில் சிவபெருமான் நடத்திய திருவிளையாடல்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. ஆனால் திருவிளையாடல் புராணம் என்ற நூல் மூல நூலன்று. அது ஒரு மொழிபெயர்ப்பு நூலாகும். வடமொழியில் தோன்றிய நூலினுடைய மொழிபெயர்ப்பாக மூன்று திருவிளையாடல் புராண நூல்கள் தமிழில் வந்தன. அவற்றில் மக்களிடம் மிகுந்த செல்வாக்கு பெற்ற நூல் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடல் புராணம் ஆகும்.*



**நான் மாடக் கூடல்:**

*மதுரையைக் கூடல் மாநகர் என்று குறிப்பிடும் வழக்கத்தை காண்கிறோம்.*

*பொய்யா விழவின் கூடல் பறந்தலை என்ற அகநானூற்றுப் பாடல் வரி கூடல் நகரில் போர்க்களம் இருந்ததையும் குறிப்பிடுகின்றது.*

*யாம் வேண்டும், வையைப் புனல் எதிர்கொள் கூடல் என்ற வரி பரிபாடலில் (10:40) காணப்படுகின்றது*

> *நான் மாடக் கூடல் நகர் (பரிபாடல் திரட்டு, 6)*
>
> *நெடுநீர் மலிபுனல், நீளமான கூடல் (பரிபாடல் 20:106)*
>
> *மாடம் பிறங்கிய மலிபுகழ் கூடல் (மதுரைக் காஞ்சி-42)*

போன்ற அடிகள் வையையின் வெள்ளப் பெருக்கையும் மாடமாளிகைகள் நிறைந்த மதுரை மாநகரின் வளத்தையும் குறிப்பிட்டுள்ளன. பரிபாடல் திரட்டு (11) கூறும்

சேய் மாடக் கூடலும் செவ்வேள் பரங்குன்றும்,

வாழ்வாரே வாழ்வார் எனப்படுவார் ,

மற்றையர் போவார் யார் புத்தேள் உலகு?

என்ற அடிகள் மதுரையிலும் திருப்பரங்குன்றத்திலும் வாழ்வாரே வாழ்பவர்கள் எனப்படுவர். இவர்களைத் தவிர வேறு யார் புத்தேள் உலகு எனக் குறிப்பிடப்படும் சொர்க்கத்திற்குச் செல்வார்கள்? என்ற வினாவை இந்த வரிகள் முன்வைக்கின்றன. ஆக மதுரையில் வாழ்ந்தாலே முக்தி என்ற பொருள் இப்பாடல் மூலம் கிட்டுகின்றது. பரிபாடல் மதுரையைப் பற்றிய சில தகவல்களை, குறிப்பாகப் புது வெள்ளம் வரும்போது அதில் புனலாடும் காதலர்கள் பற்றிய தகவல்களை விரிவாக எடுத்துரைக்கின்றது. ஆனால் பரிபாடல் திரட்டு மதுரையின் சிறப்புகளை வரிசையாக எடுத்துரைக்கிறது.

நெல்லும் நீரும் எல்லாருக்கும் எளிய என,

வரைய சாந்தமும் திரைய முத்தமும்,

இமிழ்குரல் முரசு மூன்றுடன் ஆளும்,

தமிழ்கெழு கூடல்

என்று புறநானூறு குறிப்பிடுகின்றது. மதுரை வாழ் மக்களுக்கு நெல்லும் நீரும் மலையில் கிடைக்கும்; சந்தனமும் கடல் முத்தும் தாராளமாகக் கிடைக்கும்.

தமிழ் நிலை பெற்ற தாங்கரும் மரபின்,

மகிழ்நனை மருகின் மதுரை

என்கிறது சிறுபாணாற்றுப்படை (66, 67)

மாட மதுரை என்ற சொல் மாடங்களைக் கொண்டுள்ள காவல் அரண் மிகுந்த மாளிகை அல்லது பெரிய வீடுகளை கொண்ட மதுரை என்று பொருள் தருகிறது. பின்னர் வந்த புராணங்கள் சில கதைகளை உருவாக்கி மாடங்கள் என்பன மதுரையைச் சுற்றியுள்ள பசுமலை, நாகமலை, யானைமலை, போன்ற காவல் மலைகளைக் குறிப்பதாகப். பொருள் உரைத்தன. சிவனை அழிப்பதற்காகச் சைவர்களை ஒழிப்பதற்காக ஏவி விடப்பட்ட பகைக் கருவிகள் பசு, நாகம், யானை ஆகியன என்று புராணங்கள் குறித்தன. இவற்றைச் சிவபெருமான்

கல்லாக்கி ஆங்காங்கே நிறுத்திவிட்டார். இவை நான்கும் மதுரைக்குரிய மாடங்கள் என்பதால் 'நான் மாடக்கூடல்' என்று மதுரை ஆக்கப்பட்டது என்ற விளக்கத்தைப் புராணங்கள் கூறின. நான் மாடக் கூடல் என்பதை மாட மாளிகைகள் கொண்ட மதுரை மாநகர் என்று பொருள் கொள்வதே பொருத்தமானதாகும்.

**தாமரை போன்ற மதுரை:**

எட்டுத்தொகையில் உள்ள பரிபாடல் மதுரை பற்றி எட்டுப் பாடல்களில் விளக்குகிறது. இப் பரிபாடல் ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய நான்கு பா வகைகளிலும் சேராதது. வெண்டளையும் ஆசிரியத் தளையும் விரவி வருவது. துள்ளல் ஓசை கொண்டது. இதில் 70 பாடல்கள் எழுதப்பட்டதாகவும் அவற்றில் தற்போது இருபத்திரண்டு மட்டுமே கிடைத்துள்ளதாகவும் தெரிவிக்கின்றனர். திருமால் பற்றிய ஆறு பாடல்களும் செவ்வேள் எனப்படும் முருகன் பற்றி எட்டுப் பாடல்களும் வையையைப் பற்றி எட்டுப் பாடல்களும் மதுரையைப் பற்றி நான்கு பாடல்களும்தான் இன்றைக்கு நமக்குக் கிடைத்துள்ளன. ஒவ்வொரு பரிபாடலின் கீழும் பாடியவர் பெயரும் அதற்கு இசை அமைத்தவர் பெயரும் பண்ணும் குறிப்பிடப்பட்டு இருப்பதால் இவை பண்ணிசைப் பாடல் என்று அறியப்படுகிறது. இப் பரிபாடல் மதுரை மாநகரைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது மாயோனின் கொப்பூழில் மலர்ந்த தாமரைப் பூவோடு உவமிக்கின்றது. தாமரைப் பூவின் இதழ்களைத் தெருக்கள் என்றும் இதழ்களின் நடுவில் இருக்கும் பொகுட்டு என்பது மதுரை மாநகரின் நடுவில் அமைந்திருக்கும் கோவில் என்றும் குறிப்பிடுகின்றது. மதுரை இன்றும் இதே வடிவமைப்பில் கோயிலைச் சுற்றிலும் அடுக்கடுக்காக நாற் சதுரமான தெருக்களைக் கொண்டு அமைந்துள்ளது. நடுவில் கோவில் இருக்கக் கோவிலைச் சுற்றிச் சித்திரை வீதி, ஆவணி மூல வீதி, மாசி வீதி என்று தமிழ் மாதங்களைக் கொண்ட வீதிகள் சதுர வடிவில் அமைந்துள்ளன.



**நவீன மதுரை உருவாக்கம்:**

கிபி 1937இல் மாறட் என்ற ஆங்கிலேயர் மதுரையை மறு வடிவமைப்புச் செய்ய

திட்டமிட்டார். கோயிலின் கோட்டைகளை இடிக்கவும் அகழிகளைத் தூர்த்து மேடாக்கவும் கட்டளையிட்டார். அவரவர் இடிக்கும் கோட்டைப் பகுதியை நிரப்பும் அகழிப் பகுதியைச் அவர்கள் உரிமையாக்கிக் கொள்ளலாம் என்றார். அப்போது பெருமாள் மேஸ்திரி என்பவர் அப்பணியை ஏற்றுச் செவ்வனே செய்து முடித்தார். எனவே அவர் பெயரால் அங்கு பெருமாள் மேஸ்திரி தெருவும் ஆங்கிலேயரான மாறட் பெயரால் மேல மாறட், வீதி கீழ மாறட் வீதி என்றும் இரண்டு வீதிகளுக்குப் பெயரிடப்பட்டன.

***மாதங்களின் பெயரில் மதுரை வீதிகள்:***

மதுரையில் உள்ள மீனாட்சி அம்மன் கோவிலுக்கு உள்ளே காணப்படும் ஆடி வீதியில் அம்மன் மட்டுமே ஆடி மாதம் உலா வருவார். அம்மன் பூப்படைந்த நாளைக் கொண்டாடுகின்ற விழா என்பதினால் அந்தப் பத்து நாட்களும் அம்மன் மட்டுமே தனியாக ஆடி வீதியில் வலம் வருவார். கோவிலுக்கு வெளியே நான்கு புறமும் உள்ள சித்திரை வீதியில் அதிக அளவில் மக்கள் கூடி நின்று திரைகளில் திருக்கல்யாணக் காட்சியைக் கண்டு மகிழ்வர். ஆவணி மூல வீதி என்று நான்கு திசைகளிலும் வீதிகள் உள்ளன. சித்திரையில் பட்டாபிஷேகம் செய்யப்படும் போது மீனாட்சியின் கையில் கோயில் தக்கார் செங்கோலை வழங்குவார். அந்தச் செங்கோல் ஆவணி மாதம் மூல நட்சத்திரத்தன்று சுவாமி சொக்கநாதரின் கைக்கு மாற்றப்படும்.

அன்று முதல் அவர் மன்னராக இருந்து மதுரையை ஆட்சி செய்கின்றார். அப்போது பத்து நாட்கள் திருவிளையாடல் புராணத்தில் வரும் கதைகளை ஒவ்வொரு நாளும் ஒவ்வொன்றாக நடத்திக் காட்டி விழா கொண்டாடுவர். அந்தப் பத்து நாட்களில் சுவாமி ஆவணி மூல வீதிகளில் நகர்வலம் வருவார். கரிக் குருவிக்கு உபதேசம் செய்தது, நாரைக்கு முத்தி கொடுத்தது, மாணிக்கம் விற்ற லீலை, தருமிக்குப் பொற்கிழி வழங்கியது, புட்டுக்கு மண் சுமந்தது போன்ற திருக் காட்சிகள் நடைபெறும். பிட்டுக்கு மண் சுமந்த வரலாற்றை நடத்திக் காட்டுவதற்குச் சொக்கர் வைகைக் கரைக்கு வந்து அங்குள்ள மண்டபத்தில் தங்கி அருள் பாலிப்பார்.

ஆவணி மூல வீதிகளுக்கு அடுத்து உள்ள மாசி வீதிகள் மதுரையின் தேரோடும் வீதிகள் ஆகும். மீனாட்சி அம்மனுக்கும் சொக்கநாதர்க்கும் திருமணம் முடிந்த மறுநாள் தனித்தனியாக ஆளுக்கு ஒரு தேரில் அவர்கள் மாசி வீதியில் வலம் வருவார்கள்.

***காந்தியடிகளும் மதுரையும்:***

1885 ஆம் ஆண்டு மறு அளவீடு செய்யப்பட்டு நகராட்சி தகுதி பெற்ற மதுரை மாநகருக்கு 1921ல் காந்தியடிகள் வருகை தந்தார். அவர் ரயிலில் பயணம் செய்து

*வரும் வேளையில் வயல்களில் வெறும் வேட்டியை மட்டும் முழங்காலுக்கு மேல் கட்டிக்கொண்டு மேல் சட்டை இன்றி விவசாய வேலைகள் செய்து வந்த உழவர்களைப் பார்த்து இவர்கள் இவ்வளவு துன்பப்படும்போது நான் மட்டும் ஏன் இத்தனை உடைகளை உடுத்திக் கொள்ள வேண்டும் என்று நினைத்தார். அன்று முதல் அவர் மேல் சட்டை அணிவதையும் தலைக்கு தலைப்பாகை அணிவதையும் நிறுத்திவிட்டார். அரை ஆடை மட்டும் உடுத்தினார்.*

**கோயில் நுழைவுக்கு முதல் அனுமதி:**



*1939இல் கோயில் நுழைவுப் போராட்டத்திற்குச் சத்தியமூர்த்தி தலைமை தாங்கினார். அப்போது சென்னை மாகாணத்தின் கவர்னர் ஜெனரலாக இருந்த ராஜாஜி சத்யமூர்த்திக்கு ஆதரவளித்து அதுவரை கோவிலுக்குள் செல்லக்கூடாது என்று தடுக்கப்பட்ட நாடார்களுக்கும் தலித் இன மக்களுக்கும் தடையை நீக்கினார். தமிழ்நாட்டில் ஒடுக்கப்பட்டோர் கோவிலுக்குள் வர தடைகள் இருந்து வந்த காலத்தில் முதன் முதலாக அத் தடை உடைக்கப்பட்டு கோவிலுக்குள் அனுமதி அளிக்கப்பட்ட பெருமை மதுரை மாநகருக்கு உரியதாகும்.*

**மதுரை மக்கள்:**

*உலகச் சுகாதார நிறுவன ஆய்வில் மாசில்லா நகரம் என்று பாராட்டப்பட்ட மதுரை மாநகர், தமிழகத்தின் இரண்டாவது பெரிய மாநகராட்சி ஆகும். உயர் நீதிமன்றத்தின் கிளை மதுரை மாநகரில் இருப்பது குறிப்பிடத்தக்கது. இங்கு சுமார் பத்து லட்சம் மக்கள் வசிக்கின்றனர். 1951ல் மூன்று லட்சம் பேர் இருந்தனர். 2011 இல் கணக்கெடுப்பில் மக்கள் தொகை 10 லட்சமாக வளர்ந்திருந்தது. இவர்களில் இந்துக்கள் 86 சதவீதமும், முஸ்லிம்கள் 8 சதவீதமும், கிறிஸ்தவர்கள் 5 சதவீதமும் வாழ்கின்றனர்.*

**விழவு மலி மூதூர்:**

*மதுரை எப்போதும் விழாக்கோலம் கொண்டிருக்கும் ஊர் ஆகும். மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் மாதம்தோறும் விழாக்கள் நடைபெறும். சித்திரை மாதம் சித்திரைத் திருவிழா நடைபெறும். அப்போது மீனாட்சி*

அம்மனுக்குப் பட்டாபிஷேகம், திருக்கல்யாணம், தேரோட்டம் போன்ற சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெறும்.

வைகாசி மாதம் வசந்த விழா நடைபெறும். அப்போது பத்து நாட்கள் சாமியும் அம்மனும் எண்ணெய்க் காப்பில் இருப்பார்கள்.

ஆனி மாதம் ஆனித் திருஊஞ்சல் விழா, மக நட்சத்திரம் முதல் மூல நட்சத்திரம் வரை 10 நாட்கள் நடைபெறும். அப்போது நூற்றுக்கால் மண்டபத்தில் சாமியும் அம்மனும் ஊஞ்சலில் இருப்பதைக் காணலாம்.

ஆடி மாதம் அம்மனுக்கு மட்டும் பூப்புத் திருவிழா நடைபெறும். அம்மன் மட்டும் ஆடி வீதியில் வலம் வருவார். அதே மாதத்தில் முளைக் கொட்டுத் திருவிழாவும் நடைபெறும்.

ஆவணி மாதம் மூலத் திரு நாள் அன்று சாமிக்குப் பட்டாபிஷேகம் நடந்து பத்து நாள் திருவிழா நடைபெறும்.

புரட்டாசி மாதம் நவராத்திரி விழா நடைபெறும்.

ஐப்பசி மாதம் பிரதமை முதல் சஷ்டி வரை ஆறு நாட்கள் கோலாட்டம் நடக்கும்.

கார்த்திகை மாதம் தீபத் திருவிழா நடக்கும்.

மார்கழி மாதம் பாவை நோன்பு நோற்ற பெண்கள் திருவெம்பாவை பாடும் விழா நடைபெறும். அப்போது பத்து நாள் எண்ணெய்க் காப்பும் உண்டு.

தை மாதம் வண்டியூர் மாரியம்மன் கோவில் தெப்பக் குளத்தில் தெப்பத் திருவிழா நடைபெறும்.

மாசியில் தொடங்கி பங்குனியிலும் தொடர்ந்து 48 நாட்கள் மண்டல உற்சவம் நடைபெறும்.

பங்குனி மாதம் தனியாகப் பங்குனி உத்திரத் திருவிழா கார்த்திகை நட்சத்திரத்தில் தொடங்கி உத்திரம் வரை நடைபெறும். சாரதா நவராத்திரி விழாவும் உண்டு. பங்குனி உத்திரத்தில் முருகன் திருமணம் நடைபெறுவதால் அம்மனும் சாமியும் திருப்பரங்குன்றத்திற்குத் திருமண விழாவிற்குச் சென்று வருவதும் உண்டு.

இவ்வாறு 12 மாதங்களும் மதுரையில் திருவிழாக் கோலமாகவே இருப்பதால் மதுரையை விழவு மலி மூதூர் என்று அழைப்பார்கள்.

இவை தவிர மார்கழி மாதம் நடைபெறும் அஷ்டமி சப்பரம் என்ற ஊர்வலத்தில், அஷ்டமி சப்பரத்தைப் பெண்கள் மட்டுமே இழுத்துக் கொண்டு

வருவார்கள். சாமியும் அம்மனும் எல்லோருக்கும் படி அளக்கும் விழாவில் இருவரும் வயலுக்கு வந்து கதிர் அறுக்கும் வைபவம் நடைபெறும். இது ஒரு அறுவடைத் திருவிழா. அறுத்த கதிர்களைத் தங்கள் சப்பரத்தில் கட்டிக்கொண்டு வரும்போது கதிர்களில் உள்ள நெல்மணிகள் கீழே உதிரும். அவற்றை மக்கள் பொறுக்கித் தங்களுடைய வீட்டில் கொண்டு போய் வைத்துக் கொள்வார்கள். இதனால் உணவுக்குப் பஞ்சம் வராது என்ற நம்பிக்கை உள்ளது. இவ்வாறாக இன்னும் பல திருவிழாக்கள் அம்மனும் சாமியும் வெவ்வேறு கோயில்களுக்கு வருவதாக நடைபெறும். இவை தவிர மதுரையில் இருக்கும் வேறு பல கோயில்களிலும் விதவிதமான விழாக்கள் உரிய காலங்களில் நடக்கும்.

***அரசியல் சினிமாக் களத்தில் மதுரை:***

மீனாட்சியம்மன் கோவில் இருக்கும் மதுரை மத்தியத் தொகுதியில் வெற்றி பெற்ற கட்சியே இது வரை தமிழகத்தின் ஆளுங் கட்சியாக ஒவ்வொரு சட்டமன்றத் தேர்தலின் போதும் வந்துள்ளது. இதனால் தமிழகத்தின் வெற்றியை மதுரை மீனாட்சி தீர்மானிக்கிறாள் என்ற நம்பிக்கையும் மதுரை மக்களிடம் உண்டு. புதிய அரசியல் கட்சி தொடங்குகின்றவர்களும் அரசியலில் ஒரு மாற்றம் கொண்டு வர வேண்டும் என்று நினைப்பவர்களும் மதுரை மக்களின் நாடி பிடித்துப் பார்த்த பின்பு தங்கள் பயணத்தைத் தொடர்வார்கள். எனவே மதுரையில் பொதுக்கூட்டம் நடத்தி அங்கு வரும் மக்களின் கூட்டத்தையும் ஆதரவையும் பார்த்துக் கணித்துப் பிறகு தங்கள் முடிவு சரியா தவறா என்று பார்ப்பார்கள்.

Friends of Madurai

Regd.no.22/2022

தமிழகத்தில் வெளியிடப்படும் திரைப்படங்கள் வசூலில் வெற்றி பெறுமா பெறாதா என்பதை மதுரைத் திரையரங்குகளில் வரும் வசூலைக் கொண்டும் ரசிகர்களின் ஆதரவைக் கொண்டும் கணிப்பார்கள்.

எனவே மதுரை என்பது அரசியல், திரையுலகம், இலக்கியம், ஆன்மீகம், கல்வி எனப் பல துறைகளிலும் சிறந்த பண்பாட்டுத் தலமாக அன்று முதல் இன்று வரை விளங்கி வருகிறது.

*[ஃபிரண்ட்ஸ் ஆஃப் மதுரை டிரஸ்ட் (Friends of Madurai Trust) இன் மூதூர் மதுரை நுண் ஆய்விருக்கையின் மெய் நிகர் கூட்டத்தின் உரை].*

# சந்திரோதயம் பதிப்பகம், மதுரை

**3/422, Thiruvalluvar Street,**
**Dinamani Nagar, Madurai 625 018.**
**Mob: +91 7010997639**

| | நூல்கள் | விலை (Rs.) |
|---|---|---|
| 1. | திருவிளையாடல் புராணக் கதைகள் (எளிய உரைநடையில்) | 200 |
| | **கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதை நூல்கள்** | |
| 1. | உன்னோடு உரையாடுதல் | 100 |
| 2. | காதல் மொழி | 200 |
| 3. | பார்வையில் பூத்த நிலா | 100 |
| 4. | தேனடையும் வரலாறு | 100 |
| 5. | நுண்கலை மருத்துவன் | 200 |
| 6. | தொடரும் புழுதிக்கால்கள் | 100 |
| | **முனைவர் செ. இராஜேஸ்வரியின் எம்.ஜி.ஆர். பற்றிய நூல்கள்** | |
| 1. | வெற்றித்திருமகன் எம்.ஜி.ஆர். | 200 |
| 2. | எம்.ஜி.ஆர். நிழல் நிஜம் நிரந்தரம் | 200 |
| 3. | சிக்கு மங்கு சிக்கு மங்கு சச்ச பப்பா (எம்.ஜி.ஆர். கற்பிக்கும் குழந்தை வளர்ப்பு முறைகள்) | 200 |
| 4. | வீரமகன் போராட வெற்றி மகள் பூச்சூட | 200 |
| 5. | மகளிர் போற்றும் மக்கள் தலைவர் எம்.ஜி.ஆர். | 200 |
| 6. | எம்.ஜி.ஆர். ஒரு ஜீவ நதி | 200 |
| 7. | எம்.ஜி.ஆர். ஒரு கலியுகப்போராளி | 200 |
| 8. | ஒளி விளக்கு எம்.ஜி.ஆர். | 200 |
| 9. | வெற்றிப் படிக்கட்டில் நாடோடி மன்னன் – I | 200 |
| 10. | நீங்க நல்லா இருக்கணும் [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - I] | 200 |
| 11. | பாட்டுடைத் தலைவன் எம்.ஜி.ஆர். [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - II] | 200 |
| 12. | இரசிகர்களின் இதய தெய்வம் எம்.ஜி.ஆர். | 200 |
| 13. | முத்தமிழ்க் காவியம் மதுரை வீரன் | 200 |
| 14. | இரட்டை வேடத்தில் ஜொலிக்கும் எம்.ஜி.ஆர். | 200 |
| 15. | எம்.ஜி.ஆர். படங்களில் அறிவியல் புனைவு | 200 |
| 16. | படகோட்டி, மீனவ நண்பன் ஓர் ஒப்பீடு | 200 |
| 17. | Unique Fandom of MGR | 200 |
| 18. | எம்.ஜி.ஆர். படங்களில் தொழில் தர்மம் | 200 |
| 19. | எம்ஜிஆர் படத்தில்சண்டைக்காட்சிகளின்சுவாரஸ்யங்கள்–I | 200 |
| 20. | எங்க வீட்டுப்பிள்ளை | 200 |

| | | |
|---|---|---|
| *21.* | *எம்.ஜி.ஆர். வீடும் விருந்தும்* | *200* |

**முனைவர் சந்திரிகா சுப்பிரமணியன் நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *தலைமை பொறுப்பேற்கலாம்* | *120* |
| *2.* | *இணையத் தமிழ்* | *150* |
| *3.* | *ஊடகச் சட்டங்கள்* | *250* |
| *4.* | *ஆஸ்திரேலியாவில் அருந்தமிழ்* | *200* |
| *5.* | *கொசு வீட்டில் பாயாசம் (சிறுவர் நூல்)* | *200* |
| *6.* | *மாயோன் வீட்டுத் தோட்டத்தில் (சிறுவர் நூல்)* | *200* |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**
**சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *பண்பாட்டு நகர்வுகள் – தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு* | *200* |
| *2.* | *பெண் தெய்வ வழிபாடு* | *200* |
| *3.* | *தேவேந்திரன்* | *200* |
| *4.* | *மருதநிலப் பெண் தெய்வங்கள் (வராகி, பிடாரி, தவ்வை)* | *200* |
| *5.* | *இரு நிலத்தில் திருமுருகன்* | *200* |
| *6.* | *முன்னோர் வழிபாடு (கதிரவன், காலதேவன், நாகர் வழிபாடும்)* | *200* |
| *7.* | *வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும்* | *200* |
| *8.* | *யானைக்கடவுள்* | *200* |
| *9.* | *பெண் பூப்பின் புனித வழிபாடு* | *200* |

## முனைவர் செ. இராஜேஸ்வரியின்

**கவிதைத் திறனாய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *பாடுபொருளும் பாசப்பொருளும்* | *250* |
| *2.* | *“பூ மர நிழலி”ன் களமும் காலமும்* | *200* |
| *3.* | *“2020 தைமாதத்தில் இன்று” கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு* | *100* |
| *4.* | *கவிஞர் முத்தமிழ் விரும்பியின்* ***கவிதையில் காதல்*** | *100* |
| *5.* | *கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள்* | *200* |

## ஆங்கிலக் கவிதைகளின் தமிழ் மொழி பெயர்ப்பு

**முனைவர் செ. இராஜேஸ்வரி**

| | | |
|---|---|---|
| *1.* | *எட்டுத்திக் கும் செல்வீர்* | *200* |
| *2.* | *அவன் கடவுளுக்கு நிகரானவன்* | *200* |
| *3.* | *செக்கச் சிவந்த ரோஜா* | *200* |
| *4.* | *கலீல் ஜிப்ரா னின் “மணலும் நுரையும்”* | *200* |
| *5.* | *கலீல் ஜிப்ரானின் “பாடல்கள் 14”* | *200* |

## Tamil Classics in English – *(*Dr. C. Rajeswari)

| | | |
|---|---|---|
| *1.* | Kurunthokai | 200 |
| *2.* | Agananooru | 200 |
| *3.* | Purananooru | 200 |
| *4.* | Naaladiyaar | 200 |
| *5.* | Aasaarakkovai | 200 |

| | | |
|---|---|---|
| *6.* | A Predictress from the Hill (Thiru Kutrala Kuravanchi) | 200 |
| *7.* | A Peasant with two Wives (Mukkudal pallu) | 200 |
| *8.* | Thiru Kutraala Kuravanji | 200 |

**Socio Cultural Study Series**

| | | |
|---|---|---|
| *1.* | Lord Indra – The Forgotten Diet | *300* |
| *2.* | Serpent – The Primordial God | *300* |

**தற்காலத் தமிழில் சங்க இலக்கிய நூல் வரிசை**

| | | |
|---|---|---|
| *1.* | *குறுந்தொகைக் கவிதைகள்* | *200* |

**மொழிபெயர்ப்பு ஆய்வு நூல்கள் – முனைவர் செ. இராஜேஸ்வரி**

| | | |
|---|---|---|
| *1.* | *மொழிபெயர்ப்பியல் ஆய்வு (ஆய்வு நூல்)* | *200* |
| *2.* | *கவிதை மொழிபெயர்ப்பு* | *200* |
| *3.* | *நவீன மொழிபெயர்ப்பு உத்திகள் (Co-author)* | *200* |
| *4.* | *மொழிபெயர்ப்பில் பெயரும், பொருளும்* | *200* |

**தமிழ் இலக்கண நூல்**

| | | |
|---|---|---|
| *1.* | *தமிழில் வேற்றுமை உருபுகள்* | *200* |

**சிறு கதை, கவிதை**

| | | |
|---|---|---|
| *1.* | *அமராவதியின் காதல் - சத்யப்பிரபா* | *200* |
| **2.** | *ரோஜா மொட்டு (சித்திரக் கவிதைகள்) - சத்யப்பிரபா* | *200* |

**மாத இதழ்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *தமிழணங்கு மாத இதழ்* | *200* |
| *2.* | *Love Thamizh* | *500* |

**பேராசிரியர் முனைவர் தே. ஞானசேகரனின் நூல்கள்**
**ஆங்கிலத்தில் – முனைவர் செ. இராஜேஸ்வரி**

**Moonstone Publication, Madurai**

| | | |
|---|---|---|
| 1. | Emerging Mallarism | 200 |
| 2. | Festival of lord Indra | 200 |
| 3. | Role of Devendirar's in Indian war of Independence (Sundaralingam Kudumbanar) | 200 |
| 4. | Re reading of Pallu literature | 200 |
| 5. | Mallariyan Literature | 200 |
| 6. | Frontyard without My Dad (Poem) | 200 |

**Poems of Er.Poet Muththamizh Virumbi - In English Dr. C. Rajeswari**

**[Moonstone Publication]**

| | | |
|---|---|---|
| 1. | Therapist of the Finest Art | 200 |
| 2. | Following Dusty Feet | 200 |

**Other Books**

| | | |
|---|---|---|
| *1.* | Concepts of Constitution - Dr.S. Kalai Arasu | 300 |
| *2.* | Aranyani By Vijeni (English Novel Part I & Part II) | 200 |

# சந்திரோதயம் பதிப்பகத்தின் வெளியீடுகள்



















சந்திரோதயம் பதிப்பகம்

**தொடர்புக்கு**

சந்திரோதயம் பதிப்பகம்
3/422, தினமணி நகர்,
மதுரை — 625 018
அலைபேசி : +91 7010997639

**Contact**

Chandrothayam Pathippagam
3/422, Dinamani Nagar
Madurai – 625 018
Ph: +91 7010997639

தமிழணங்கு மாத இதழை வெளியிடுவோர்:
இ. சதீஷ் ராஜ்குமார் (அட்வகேட்), இயக்குனர், சந்திரோதயம் அறக்கட்டளை, 3/422, தினமணி நகர்,
மதுரை 625 018, Ph: +91 7871123226

அன்பளிப்பு உருபாய்: 120/–